# நெல்லை மாவட்டம் கையேடு

ஆசிரியர்
தே. கோபாலன்
தொல்பொருள் அலுவலர்

பொறுப்பாசிரியர்
நடன. காசிநாதன்
இயக்குநர்

வெளியிட்டோர்
தமிழ்நாடு அரசு
தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை-600113
1997

முதற்பதிப்பு-1997 — 500 பிரதிகள்
வெளியீடு எண் 129






நெல்லை மாவட்டம் - கையேடு



ஆசிரியர்
தே. கோபாலன்

பொறுப்பாசிரியர்
நடன. காசிநாதன்

விலை ரூ.

அச்சிட்டோர்
தமிழ்நாடு அரசு
தொல்பொருள் ஆய்வுத்துறை
தரமணி, சென்னை-600113

# அணிந்துரை

தமிழகம் கலைகளின் பெட்டகம் என்று கூறப்படுகிறது. இங்கு கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, நாட்டியக் கலை எனப் பல கலைகள் சிறந்து விளங்குகின்றன என்பதை தற்போது காணப்பெறும் பல மரபுச் சின்னங்கள் மூலமாகவும், வழிபாட்டில் உள்ள ஆலயங்கள் மூலமாகவும் அறிந்து கொள்ள முடிகிறது. அது மட்டுமல்லாமல் அவ்வப்போது தற்செயலாகவும் மற்றும் அகழாய்வு மூலமும் வெளிப்படுத்தப் படுகின்ற தொல்பொருட்கள் மூலமாகவும், பண்டைத் தமிழரின் கலையார்வம் வெளிப்படுகின்றன. சாதாரண சிறு மோதிரம் செய்தால் கூட அதன் மீது எழில் மிகு உருவங்கள் செதுக்கியும் யார் அந்த மோதிரத்தை அணிந்திருந்தாரோ அவரின் பெயரைப் பொறித்தும் தயாரித்திருப்பது கண்கூடு. ஒரு சில கலை, தமிழகத்தைப் பொறுத்த வரை சுமார் கி. மு. 1000 ஆண்டில் இருந்து நமக்குத் தெரிய வருகிறது. தூத்துக்குடி மாவட்டம் ஆதிச்சநல்லூரில் இருந்து கிடைத்த தாய்த் தெய்வச் செப்புத் திருமேனியும், கொடுமணல் அகழாய்வு மூலம் தெரிய வந்துள்ள சிறிய வெண்கலப் புலி உருவமும், பூம்புகாரில் அகழாய்வு மூலம் வெளிப்படுத்தப்பட்ட புத்த விகாரத்தில் கிடைத்த புத்தரது செப்புத்திருமேனியும் பண்டைத் தமிழர்கள் செப்புத் திருமேனிகள் மற்றும் உருவங்கள் செய்வதில் கைதேர்ந்து விளங்கியிருக்கிறார்கள் என்பதைப் புலப்படுத்துகின்றன. அதே போன்று ஓவியக்கலையிலும், சிற்பக்கலையிலும் தமிழர்கள் உயர்ந்த இடத்தைப் பெற்றுத் திகழ்ந்திருக்கிறார்கள். அரிய சிற்பங்கள் தமிழகத்தில் அனைத்து மாவட்டங்களிலும் சிதறிக் கிடக்கின்றன.

இவற்றைப் பற்றி ஆய்ந்து, ஒவ்வொரு மாவட்டத்திலும் எங்கெங்கு அத்தகைய கலைச் செல்வங்கள் காணப்படுகின்றன என்பதைப் பற்றிய ஒரு கையேட்டை வெளிப்படுத்துவது அவசியம் என்று இத்துறை கருதியது. அதன் அடிப்படையில் இத்துறையும், இராமநாதபுர மாவட்ட ஆட்சியர் அலுவலகமும் இணைந்து முதன் முதலில் இராமநாதபுர மாவட்டத் தொல்லியல் கையேட்டை (Archaeological Guide of Ramnad District) ஆங்கிலத்தில் வெளியிட்டன. அதே போன்று மற்ற மாவட்டங்களுக்கும் மாவட்டத் தொல்லியல் கையேடு வெளியிட வேண்டும் என்ற அவாவில்; இரண்டாவதாகத் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள மரபுச் சின்னங்கள் மற்றும் தொல்லியல் சார்ந்த முக்கிய இடங்கள் ஆகியவற்றைப் பற்றிய கையேடு இப்போது இத்துறையால் வெளியிடப்படுகிறது.

இக்கையேட்டில் கோயில்கள், பண்டைத் தமிழ்க் கல்வெட்டுக்கள், ஓவியங்கள் பற்றிய குறிப்புகள் அடங்கியுள்ளன. குறிப்பாக மானூர் என்னும் ஊரில் அமைந்துள்ள அம்பலநாத சுவாமி கோயிலில் பாண்டிய மன்னன் மாறன் சடையனின் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. இக்கல்வெட்டில் கி. பி 9-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தின் தென் பகுதியில் ஊராட்சி முறை எவ்வாறு இருந்தது என்பது விளக்கமாகக் கூறப்படுகிறது. மேலும் இம்மாவட்டத்தில் இரவநல்லூருக்கு அருகில் உள்ள நரம்புநாதர் கோயில் என்று அழைக்கப்படும் சிவன் கோயிலின் முன் கோபுரத்தில் ஐந்து தளங்களிலும் அழகிய வண்ணத்தில் தீட்டப்பட்டுள்ள அருமையான ஓவியங்கள் காணப்படுகின்றன. இவை கி. பி. 16-ம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இங்குள்ள ஓவியங்களில் ஒன்று அரேபியர்கள் தமிழகத்துடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்ததைச் சுட்டிக் காட்டும் வகையில், அரேபியர்கள் குதிரைகளுடன் கப்பலில் தமிழகம் வந்திறங்கும் காட்சி எழிலோடு தீட்டப்பட்டு இனிமையாகக் காட்சி தருகிறது.

இவ்வாறு பல தொல்லியல் சார்புடையச் சான்றுகளைக் கொண்டு விளங்கும் திருநெல்வேலி மாவட்டத்தைப் பற்றி, வெளிமாவட்டங்களில் இருந்து வருகின்றவர்கள் எளிதாகத் தெரிந்து கொள்ளும் வண்ணம் எழுதப் பட்டிருப்பதே இச்சிறிய கையேடாகும். இந்நூலைக் கல்வெட்டுச் சான்றுகளோடு, கடினமாக உழைத்து எழுதியிருக் கின்ற இந்நூலின் ஆசிரியர், கன்னியாகுமரி மாவட்டத் தொல் பொருள் அலுவலர் திரு. கோபாலன் அவர்களை மனமுவந்து பாராட்டுகிறேன். இது போன்று மேலும் பல நூல்கள் எழுதி தமிழகத்தில் பொதிந்து கிடக்கும் வரலாற்று உண்மைகளை வெளிக் கொணர இவரை வாழ்த்துகின்றேன். இந்நூலைக் குறுகிய காலத்தில் சீரானமுறையில் அச்சிட்டு உதவிய அச்சுப் பிரிவினருக்கும் மற்றும் இந்நூல் அச்சாகையில் அச்சுப்பிழை திருத்தி செப்பம் செய்திட்ட திருமதி இரா. வசந்தகல்யாணி, கல்வெட்டாய்வாளர் அவர்களுக்கும் என் நன்றி.

அன்பன்

**நடன. காசிநாதன்**
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை

# 1. அம்பாசமுத்திரம்

திருநெல்வேலிக்கு தென்மேற்கே 35 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் எரிச்சா உடையார் கோயில் மற்றும் திருமூலநாதர் கோயில் ஆகிய கோயில்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் இவ்வூரின் தொன்மை வரலாற்றினை வெளிப் படுத்துவதாக அமைந்துள்ளன.

எரிச்சா உடையார் கோயிலில் வரகுணபாண்டியன், சடையமாறன், சோழன்தலைகொண்ட வீரபாண்டியன், சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியன், சடாவர்மன் சீவல்லபன் ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன. வரகுண பாண்டியனின் 16-ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில் இவ்வூர் 'முள்ளிநாட்டு இளங்கோய்க்குடி' என்றும், இறைவன் 'திருப்போத் துடையார் ஸ்ரீகோயில் படாரர்' என்றும் குறிப்பிடப் படுகின்றன. சடாவர்மன் சீவல்லபனின் 20-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவ்வூர் 'முள்ளிநாட்டு பிரம்மதேயம் ஸ்ரீராஜராஜ சதுப்பேதி மங்கலம்' என்றும், இறைவன் 'திருப்போத்துடைய மகாதேவர்' என்றும் வழங்கப்பட்டதிலிருந்து இவ்வூர் பிற்காலத்தில் பிராமணர்களுக்குத் தானமாக வழங்கப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

திருமூலநாதர் கோயிலில் மாறஞ்சடையன், சடைய மாறன், சோழன்தலைகொண்ட வீரபாண்டியன், சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியன் ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல் வெட்டுகளில் இவ்வூர் 'முள்ளிநாட்டு பிரம்மதேயம் இளங்கோய்க்குடி' என்றும் 'ஸ்ரீராஜராஜ பாண்டி நாட்டு முடிகொண்ட சோழவளநாட்டு முள்ளிநாட்டு

பிரம்மதேயம் ஸ்ரீராஜராஜ சதுப்பேதி மங்கலம்' என்றும் குறிப்பிடப்படுகின்றன. இறைவன் 'திருச் சாலைத்துறை நின்றருளிய பெருமாள்' என்றும் 'திருச்சாலைத்துறை ஸ்ரீமூலஸ்தான ஆழ்வார்' என்றும் குறிப்பிடப்படுகின்றார். சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியனின் 13-ஆவது ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டில் 'நானாதேசித் திசை ஆயிரத்து ஐநூற்றுவர்' என்ற பெயரில் ஒரு வணிகக் குழு (Merchant Guild) இருந்ததாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. இக்குழுவினைச் சேர்ந்த 'சோலை ஐநூற்றுவன்' என்பவன் இக்கோயிலுக்குத் தானம் வழங்கியதைப் பற்றி இக்கல்வெட்டு கூறுகிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் பல இடங்களில் உள்ள கல்வெட்டுகளிலும் இவ்வணிக அமைப்புப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 2. அரிகேசவநல்லூர்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் வீரவ நல்லூரிலிருந்து இரண்டு கி.மீ. தொலைவில் அமைந் துள்ளது. இவ்வூரிலுள்ள சிவன் கோயிலில் மொத்தம் 13 கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் பழமை யானது சடாவர்மன் குலசேகரனுடைய (கி.பி. 1190-1221) கல்வெட்டாகும். எனவே இம்மன்னனது காலத் திலேயே இக்கோயிலின் தற்போதைய அமைப்பு கட்டப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது. கல்வெட்டுகளில் இவ்வூர் 'அரிகேசரிநல்லூர்' என்றும் இறைவனது பெயர் 'அரிகேசரியீசுவரமுடையார்' என்றும் குறிப்பிடப்படுகின்றன.

மூன்றாம் திருச்சுற்றில் வடகிழக்கு மூலையில் அம்மன்கோயில் அமைந்துள்ளது. இவ்வம்மன் 'பெரிய நாச்சியார்' எனக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படு கிறாள்.

இக்கோயிலில் பல சிற்பங்கள் கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கலை அமைதியினைக் கொண்டு விளங்குகின்றன. எனவே இங்கு அக்காலத்திலேயே கோயில் இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

## 3. ஆழ்வார்குறிச்சி

அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பாசமுத்திரத்திற்கு வடமேற்கே ஆழ்வார்குறிச்சி அமைந்துள்ளது. இவ்வூரில் அமைந்துள்ள ஆவுடையம்மன் கோயில் மற்றும் வள்ளியப்பர் கோயிலில் காணப்படும் கல்வெட்டுகள் இப்பகுதியின் வரலாற்றினை ஓரளவு அறிந்து கொள்வதற்கு உதவுகின்றன.

ஆவுடையம்மன் கோயிலில் கோனேரின்மை கொண்டானின் 6-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனாக இருக்கலாம்) இவ்வூரினைக் ‘கொல்லம் கொண்ட பாண்டியச் சதுர்வேதி மங்கலம்’ என்றும், இறைவனை ‘நரசிங்க ஈஸ்வரமுடைய நாயனார்’ என்றும் குறிப்பிடுகின்றது. இக்கல்வெட்டு சுந்தரபாண்டியன் காலிங்கராயர் எழுத்து எனத் தொடங்குகிறது. இவன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் அதிகாரியாக இருந்தவனாகையினால் ‘கோனேரின்மை கொண்டான்’ என இக்கல்வெட்டு குறிப்பிடுவது முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனைத்தான் என்பது தெளிவாகின்றது.

வள்ளியப்பர் கோயிலில் மன்னர் பெயர் குறிப்பிடப்படாத ஒரு கல்வெட்டில் இவ்வூர் ‘முள்ளிநாட்டு பிரம்மதேயம் ஸ்ரீராஜராஜ சதுர்வேதிமங்கலத்து வடமேல் பிடாகை காடேறு’ என்றும், இறைவன் ‘திருவள்ளீச்சுரமுடையார்’ என்றும் குறிப்பிடப்படுகின்றன.

அதே கோயிலில் கி.பி. 1612-ல் பொறிக்கப் பட்டுள்ள நாயக்கர் காலக் கல்வெட்டில் இவ்வூர் 'முள்ளிநாட்டு வடமேல் பிடாகை ஆழ்வார்குறிச்சி' என்றும், இறைவன் 'நயினார் திருமுள்ளிசுரமுடைய நம்பிரானார்' என்றும் குறிப்பிடப்படுகின்றன.

## 4. இடைக்கால்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பா சமுத்திரத்திற்கு வடக்கே அமைந்துள்ளது. இவ்வூரின் வரலாற்றினை அறிவதற்கு இங்கு அமையப் பெற்றுள்ள தியாகராஜசுவாமி சிவன் கோயிலும், கருமாணிக்கப்பெருமாள் கோயிலும் நமக்கு ஓரளவு துணை நிற்கின்றன. தியாகராஜசுவாமி கோயிலில் கொல்லம் 739-ல் (கி.பி. 1563) பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு இவ்வூரினைத் 'தென்திருவாரூர்' என்றும், இறைவனை அம்பிகையீஸ்வரர் என்றும் குறிப்பிடு கின்றது. இராமராஜா விதலஈஸ்வர மகாராஜாவின் கல்வெட்டில் இறைவன் 'திருவாம்பிகை ஈஸ்வரமுடை யார்' எனக் குறிப்பிடப்படுகின்றார். விசுவநாத நாயக்கரின் மகனான கிருஷ்ணப்ப நாயக்கரின் கல்வெட்டு ஒன்றும் இக்கோயிலில் பொறிக்கப் பட்டுள்ளது. கருமாணிக்கப் பெருமாள் கோயிலில் சடா வர்மன் குலசேகர பாண்டியனின் (பூவின் கிழத்தி) 17-ஆவது மற்றும் 21-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளும், சடாவர்மன் குலசேகர பாண்டி யனின் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. இக் கல்வெட்டுகளில் இவ்வூர் 'இராஜராஜ சதுர்வேதி மங்கலம்' என்றும் இறைவன் 'செயதுங்க விண்ணக ராழ்வார்' என்றும் 'செயதுங்க விண்ணகரெம்பெருமான்' என்றும் குறிப்பிடப்படுகின்றன. குலசேகர பாண்டியனின் 17-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இராஜராஜ சதுர்வேதிமங்கலத்து ஊர்ச் சபை பற்றிக் குறிப்பிடுகின்றது.

## 5. இலஞ்சி

இவ்வூர் தென்காசி வட்டத்தில் தென்காசிக்கு வடமேற்கே சுமார் 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

இவ்வூர்ப் பகுதியில் பெருங்கற்காலத்தைச் சார்ந்த சுமார் 2,500 ஆண்டுகட்கு முற்பட்ட ஈமத் தாழிகள் ஒன்றினுள் அக்கால மனித மண்டையோடு முழுமையாகக் கிடைத்துள்ளது. இவ்வூரின் தொன்மை வரலாறு பெருங்கற்காலத்திலிருந்து தொடங்குவதை இச்சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

இவ்வூரில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் எடுக்கப்பட்ட குமாரசுவாமி கோயில் உள்ளது. இக்கோயிலில் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் (கி.பி. 1409) 14-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, மாறவர்மன் சீவல்லபனின் 30-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, சடாவர்மன் குலசேகர பாண்டியனின் 10-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஆகியவை பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் 'தென்வாரிநாட்டு இலஞ்சி எனும் சுந்தரபாண்டிய நல்லூர்' என்றும், 'சுந்தரபாண்டியநல்லூர்' என்றும், இறைவன் 'இருவற்கு ஈஸ்வரமுடைய நாயனார்' என்றும் ''திருபாகீஸ்வரமுடைய நாயனார்'' என்றும் குறிப்பிடப்படுகின்றன.

## 6. கங்கைகொண்டான்

இவ்வூர் மதுரை - திருநெல்வேலி சாலையில் திருநெல்வேலிக்கு வடக்கே 16 கி.மீ. தொலைவில் சிற்றாற்றின் வட கரையில் அமைந்துள்ளது.

இவ்வூரின் மேற்கே சிற்றாற்றின் (தொன்மை பெயர் சித்ராநதி) தென்கரையில் சோழர் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கைலாசநாதர் கோயில் இவ்வூரின் வரலாற்றினை ஓரளவு அறிந்து கொள்வதற்குத் துணைபுரிகின்றது.

தலபுராணத்தில் அகத்தியரால் தென்பாண்டி நாட்டில் அர்ப்பணம் செய்யப்பட்ட மூன்று கோயில் களில் ஒன்றாக இக்கைலாசநாதர் கோயில் கருதப் படுகிறது. மேலும் புளியவனத்தில் (கல்பக) உள்ள இக்கோயில் அக்கினி வழிபட்டதாகவும், சிவனின் மூன்றாவது கண்ணாகவும் கருதப்பட்டு வருகின்றது

இக்கோயிலில் மூன்றாம் இராசராசன் மற்றும் முதலாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இராசராசனின் 8 மற்றும் 26-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளில் இவ்வூர் 'ஸ்ரீவல்லபச் சதுர்வேதி மங்கலம்' எனக் குறிப்பிடப்படு கின்றது, இப்பெயரே இராசேந்திர சோழனின் தொடக்க ஆட்சிக்காலம் வரை நிலவி வந்துள்ளது. இவனது கங்கையாற்றுப் படுகையின் படையெடுப் பிற்குப் பின் இவ்வூர் 'கங்கைகொண்ட சோழச் சதுர் வேதி மங்கலம்' எனப் பெயர் மாற்றம் பெற்றுள்ளதை சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியனின் கல்வெட் டொன்றின் மூலம் அறியலாம். இக்கோயிலில் பொறிக் கப்பட்டுள்ள பாண்டியர் கல்வெட்டுகளில் மாறஞ் சடையன், முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், சீவல்லபன் ஆகியோரது கல்வெட்டுகள் அடங்கும். மாறஞ்சடையனின் கல்வெட்டில் இவ்வூர் 'கீழ்களக் கூற்றத்து பிரம்மதேயம் 'சீவல்லமங்கலம்' என்றும், இன்றவன் 'ஸ்ரீகயிலாயத்துப் படாரர்' என்றும் குறிப்பிடப்படுகின்றன. முதலாம் மாறவர்மன் சுந்தர

பாண்டியன் கல்வெட்டில் இவ்வூர் 'கீழ்களக்கூற்றம் கங்கைகொண்டான்' என்றும் இறைவன் 'ஸ்ரீகயிலாய முடையநாயனார் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

இக்கோயில் முதலாம் பராந்தக சோழனால் (மதிரை கொண்டான்) எடுப்பிக்கப்பட்டிருக்கலாமோ எனும் ஐயத்தினை முதலாம் இராசராசனின் 26-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று ஏற்படுத்துகின்றது. இக்கோயிலுக்கருகில் 'ஸ்ரீ வீர நாராயண் ஏரி' என்னும் ஒரு குளம் இருந்ததாக இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது. முதலாம் பராந்தகனுக்கு வீரநாராயணன் என்ற பட்டப்பெயர் இருந்தது இங்கு கருத்தில் கொள்ளத் தக்கது. ஆனால் தற்போது காணப்படும் கோயிலின் முழுப்பகுதியும் முதலாம் இராசராசன் மற்றும் முதலாம் இராசேந்திரனின் கலைப்பாணியினை ஒத்ததாகவே விளங்குகின்றது.

## 7. கடையம்

கீழ்க்கடையம், மேற்கடையம் என இரு பகுதிகளாக உள்ளது. தென்காசி வட்டத்தில் தென்காசிக்கு தென்கிழக்கே அமைந்துள்ளது. கீழ்க்கடையத்தில் ஒரு பாறையில் மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் 3-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூர் 'கோநாட்டு விக்கிரம பாண்டிய நல்லூர்' என்று குறிப்பிடப்படுகின்றது.

மேற்கடையத்தில் உள்ள கல்யாணி அம்மன் கோயிலில் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள்

பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் சடாவர்மன் சீவல்ல பனின் 18-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும், முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 18-ஆவது மற்றும் 21-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு களும் அடங்கும். சீவல்லபனின் (கி.பி.1120-1146) கல்வெட்டில் இவ்வூர் 'இராஜராஜ சதுர்வேதி மங்கலம்' எனக் குறிப்பிடப்படுகின்றது. சுந்தர பாண்டியனின் (கி.பி. 1216-1244) கல்வெட்டில் இவ்வூர் 'கோனாடு கடையம் எனும் விக்கிரம பாண்டியநல்லூர்' எனக் குறிப்பிடப்படுகின்றது. இறைவன் 'கலியுக இராமேஸ்வரமுடையார்' எனக் குறிப்பிடப்படுகின்றார். இவ்வூர் முதலில் 'இராஜ ராஜசதுர்வேதி மங்கல' மாக இருந்து பின் 'கடையம்' எனும் விக்கிரம பாண்டிய நல்லூராக மாறித் தற்பொழுது கடையம் (கீழ்க்கடையம், மேற்கடையம்) எனும் பெயர்களில் மட்டும் வழங்கப்படுவதை இக் கல்வெட்டுகள் மூலம் அறியலாம்.

## 8. கடையநல்லூர்

இவ்வூர் தென்காசி வட்டத்தில் தென்காசிக்கு வடக்கே 16 கி.மீ. தொலைவில் தென்காசி—இராச பாளையம் பெருவழியில் அமைந்துள்ளது.

இவ்வூரின் வரலாற்றினைப் பறைசாற்றும் வண்ணம் ஏராளமான கல்வெட்டுகளைத் தாங்கிக் கடகாலீஸ்வரர் சிவன் கோயிலும் கரியமாணிக்கப் பெருமாள் கோயிலும் விளங்குகின்றன. கடகாலீஸ் வரர் கோயிலில் மாறவர்மன் பெருமாள் குலசேகர பாண்டியனின் 19-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1498), சடாவர்மன் சீவல்லபனின் 7-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, (கி.பி. 1541) மாறவர்மன்,

சுந்தரபாண்டியனின் 5-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, சடாவர்மன் குலசேகரபாண்டியனின் 5, 11-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் மற்றும் சடாவர்மன் பராக்கிரம பாண்டியனின் 35-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஆகியன பொறிக்கப் பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் 'வடவாரி நாட்டுக் கடையநல்லூர்' என்றும் இறைவன் 'திருக்காமவீச்சுரமுடைய நாயனார்' என்றும், 'திருக் காமவீச்சுரமுடைய மகாதேவர்' என்றும் குறிப்பிடப்படு கிறார். கடகாலீஸ்வரர் கோயில் அம்மன் சன்னிதியில் உள்ள சடாவர்மன் குலசேகர பாண்டியனின் 11-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இறைவியை 'உலகுடைய நாச்சியார்' எனக் குறிப்பிடுகின்றது. 'பூமாதுபுணர' என்ற மெய்க்கீர்த்தியுடன் திகழும் பிற்காலப் பாண் டியர் கல்வெட்டு ஒன்று 'கலங்காட்டூர்ப் பெருவழி' மற்றும் 'கல்லங்கானத்துப் பெருவழி' ஆகிய இரு பெருவழிகளையும் குறிப்பிடுகின்றது.

கரியமாணிக்கப்பெருமாள் கோயிலில் சடாவர்மன் குலசேகர பாண்டியனின் 30-ஆவது, மாறவர்மன் பராக்கிரம பாண்டியனின் 28-ஆவது, சடாவர்மன் குலசேகர பாண்டியனின் 38-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. சடாவர்மன் குலசேகரபாண்டியனின் கல்வெட்டில் இறைவன் 'குலசேகர விண்ணகரெம்பெருமான்' எனக் குறிப்பிடப் படுகிறார். மாறவர்மன் பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டில் 'பொன்னின் பெருமாள் பாண்டியன் சந்தி' என்ற இம்மன்னனின் மருமகன் பெயரால் நடத்தப்பட்ட பூசைக்கு நிலம் தானமாகக் கொடுக்கப் பட்டதை இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

கரியமாணிக்கப் பெருமாள் கோயிலுக்கு வெளியில் உள்ள கல்லில் பெருமாள் குலசேகர பாண்டியனின்

29-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1504) பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு திருவேட்பூர் "சம்மணமழ்கியான் ஆவுடையான்" பெயரால் மடம் அமைத்ததைக் குறிப்பிடுகின்றது.

## 9. கரிசூழ்ந்தமங்கலம்

அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பாசமுத்திரத் திற்குக் கிழக்கே சுமார் 18 கி.மீ. தொலைவில் அமையப் பெற்றுள்ளது.

இவ்வூரிலுள்ள சுந்தரேஸ்வரர் சிவன் கோயிலும், வெங்கடாசலபதி கோயிலும் வரலாற்றுச் சின்னங் களாகத் திகழ்கின்றன. சிவன் கோயிலில் சடாவர்மன் வீரபாண்டியனின் 9-ஆவது மற்றும் 10-ஆவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டுகளும், மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 3-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும், பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "கரிசெயமங்கலம்" என்றும் இறைவன் "காணவினிய பாண்டீஸ்வரமுடைய நாயனார்" என்றும் குறிப்பிடப் படுகின்றன. குலசேகரபாண்டியனால் இக்கோயில் விமானம் பழுது பார்க்கப்பட்டதனை இவனது கல்வெட்டு மூலம் அறியமுடிகிறது.

பெருமாள் கோயிலில் குலசேகர பாண்டியனின் (எம்மண்டலமும் கொண்டருளிய) 12-ஆவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டும், கொல்லம் 577, 588, 720 ஆண்டுக் கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "தென்திருவேங்கடம்" என்றும், "குலசேகரமங்கலம்" என்றும் "முள்ளி நாட்டு அம்லலாஜபுரி சதுர்வேதி மங்கலம்" என்றும் குறிப் பிடப்படுகிறது. இறைவன் "திருவேங்கடநாதர்"

என்றும், 'தென்திருவேங்கடவிண்ணகரெம்பெருமாள்' என்றும், 'தென்திருவேங்கடமுடைய நாயனார்' என்றும் குறிப்பிடப்படுகிறார்.

## 10. கரிவலம்வந்தநல்லூர்

இவ்வூர் சங்கரன்கோயில் வட்டத்தில், சங்கரன் கோயிலுக்கு வடக்கே 11 கி.மீ. தொலைவில் ஸ்ரீவில்லி புத்தூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இவ் வூரின் வரலாறு பெருங்கற்காலத்திலிருந்து தொடங்கு வதைக் காட்டும் வண்ணம் இங்கு தாழி கிடைத் துள்ளது. கார்னீலியன், பச்சை வண்ணக் கண்ணாடி, மஞ்சள் வண்ணக் கண்ணாடி முதலியவற்றாலான காதணிகள் கிடைத்துள்ளன. இவை தவிர மரம் மற்றும் களிமண்ணிலான காதணிகளும் கிடைத் துள்ளன. சோழர் காலத்துச் செப்புக்காசுகளும் கிடைத் துள்ளன. சங்கு வளையல்களும் கிடைத்துள்ளன.

இவ்வூரிலுள்ள 'பால்வண்ணநாதசுவாமி' கோயிலில் ஏராளமான தென்காசிப் பாண்டியர் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் லிங்கம் பால் வண்ணப் படிகத்தில் அமைக்கப்பட்டிருப்பதால் 'பால்வண்ணநாதர்' என அழைக்கப்படுகிறார். கல்வெட்டுகளில் இவ்வூர் 'ஆரியநாட்டுக் கரிவர நல்லூர்' என்றும் இறைவன் 'திருக்காவுடைய தம்பிரானார்' என்றும், 'திருக்கலாந்தச் சுரமுடைய நாயனார்' என்றும், 'உடையார் திருக்கலாவூர் நாயனார் என்றும் குறிப்பிடப்படுகின்றன. சடில குலசேகரனின் 7-ஆவது ஆட்சியாண்டு (கி.பி. 1402) அழகன்பெருமாள்சீவல்லபன் (கி.பி. 1471), அபிராம வரதுங்கராமனின் 2-ஆவது ஆட்சியாண்டு (கி.பி. 1589), பராக்கிரம பாண்டியர் ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

## 11. கல்லிடைக்குறிச்சி

திருநெல்வேலிக்கு மேற்கே சுமார் 35 கி.மீ. தொலைவில் அம்பாசமுத்திரம் வட்டத்தில் இவ்வூர் அமைந்துள்ளது.

இவ்வூரில் நாகேஸ்வரமுடையார் கோயில், கிரிகிருஷ்ணன் கோயில் ஆகியன இருந்து மறைந்துள்ளன. குலசேகரமுடையார் கோயில், விநாயகர் கோயில், கொசக்குடி பெருமாள் கோயில் ஆகியன உள்ளன. இக்கோயில்களில் பொறிக்கப்பட்டுள்ள பிற்காலப் பாண்டியரின் கல்வெட்டுகள் இவ்வூரின் வரலாற்றினை ஓரளவு அறிந்து கொள்வதற்குத் துணைபுரிகின்றன.

நாகேஸ்வரமுடையார் கோயிலில் முதலாம் சடாவர்மன் குலசேகரபாண்டியனின் (கி.பி. 1190-1218) 13-ஆவது மற்றும் 25-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள், முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் (கி.பி. 1206-1244) 6, 9, 21-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் மற்றும் விக்கிரம பாண்டியனின் (கி.பி. 1283-1296) 11-ஆவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டு ஆகியன பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் இவ்வூர் 'முள்ளிநாட்டு' பிரம்ம தேயம் ஸ்ரீராஜராஜ சதுர்வேதி மங்கலத்துத் தென் பிடாகை 'கல்லிடைக்குறிச்சி' எனக் குறிப்பிடப் படுகின்றது. இக்கோயில் இறைவன் 'நிலையுடைய பாண்டிய ஈஸ்வரமுடையார்' எனக் குறிப்பிடப் படுகின்றார்.

கிரிகிருஷ்ணன் கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 22-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, முதலாம் சடாவர்மன் குலசேகரபாண்டியனின் 2, 11 மற்றும் 14-ஆவது ஆட்சியாண்டுக்

கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருந்தன. கல்வெட்டு களில் இறைவன் 'நாலாயிர விண்ணகரெம்பெருமான்' எனக் குறிப்பிடப்படுகிறார். நாகேஸ்வரமுடையார் கோயிலும் கிரிகிருஷ்ணன் கோயிலும் முதலாம் சடா வர்மன் குலசேகரபாண்டியனாலேயே கட்டப்பட்டிருக்க வேண்டும்.

கொசக்குடி பெருமாள் கோயிலில் குலசேகர பாண்டியனின் 2-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் வீரபாண்டியனின் 20-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. மேலும் கொல்லம் 613-ல் (கி.பி. 1437) பொறிக்கப்பட்ட சிதைந்த கல்வெட்டொன்றும் காணப்படுகின்றது. இக்கல் வெட்டுகளில் இவ்வூர் 'மதிட்குறிச்சி' மற்றும் 'மதில் குறிச்சி' என்றும் இறைவன் 'நயினார் பெரிய பிரான்' என்றும் குறிப்பிடப்படுகின்றன.

குலசேகரமுடையார் கோயிலில் வீரப்பநாயக்கரின் கல்வெட்டு கி.பி. 1548-ல் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு கொல்லர்க்கும் தச்சர்க்கும் வரி நீக்கி யமை குறித்துக் குறிப்பிடுகின்றது.

## 12. களக்காடு

இவ்வூர் நாங்குனேரி வட்டத்தில் நாங்குனேரிக்கு மேற்கே சுமார் 14 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

இவ்வூரில் ஜமதக்னீஸ்வரர் கோயில், திருவேங்கடநாதர் கோயில், பெருமாள் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. பெருமாள் கோயிலில் உள்ள விசயநகரவேந்தர் சதாசிவதேவ மகாராயர் கல்வெட்டில் இவ்வூர் 'களக்காடு எனும் சோழகுலவல்லிபுரம்' எனக் குறிப்பிடப்படுகிறது.

சத்யவாகீஸ்ரர் கோயில் ஆவணமொன்றில் இவ்வூர் வானவன்நாட்டு பச்சாற்று போக்கு களக்காடு எனும் சோழகுலவல்லிபுரம்' என்றும் இறைவன் 'புறவெரிச்சுவரமுடையநாயனார்' என்றும் குறிப்பிடப்படுகிறது. ஜமதக்னீஸ்வரர் கோயிலில் அபிராமபராக்கிரம பாண்டியனின் மகனான பராக்கிரம பாண்டியனின் 6-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1548), அதிவீரராம பாண்டியனின் 5-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. ஜமதக்னீஸ்வரர் கோயில் விமானத்தின் வட சுவரில் ரகுவீர பாண்டியனின் (கி.பி. 1548) கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இறைவன் 'திருவக்னீஸ்வரமுடைய நாயனார்' எனக்குறிப்பிடப்படுகின்றான். [ஜமதக்னீஸ்வரர் கோயிலின் கிழக்கே உள்ள ஒரு கல்வெட்டு பால மார்த்தாண்ட குலராஜ சின்னஞ்சதேவர் இக்கோயிலில் நித்ய பூசைக்கு தானம் கொடுத்ததனைத் தெரிவிக்கின்றது.] திருவேங்கடநாதர் கோயிலிலுள்ள சீவல்லபனின் கல்வெட்டில் இறைவன் 'திருவேங்கடநாதர்' என்றே குறிப்பிடப்படுகிறார்.

களக்காடு ஊருக்குக் கிழக்கே உள்ள ஓர் ஆலமரத்தடியில் உள்ள கல்லில் அழகன்பெருமாள் அதிவீர ராமன் சீவல்லபனின் 38-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு 'சீவலநல்லூர்' என்ற பெயரில் ஊர் ஒன்று அமைத்ததனையும் இவ்வூரில் வீட்டுமனைகளுக்கான ஆறு திங்கள்களுக்குரிய வரி தொடர்பாகவும் குறிப்பிடுகின்றது.

## 13. களக்குடி

இவ்வூர் திருநெல்வேலி வட்டத்தில் திருநெல்வேலிக்கு மேற்கே சுமார் 24 கி.மீ. தொலைவில்

உக்கிரன்கோட்டை அருகில் அமைந்துள்ளது. ஆனைமலைக் கல்வெட்டும், திருப்பரங்குன்றம் கல்வெட்டும், 'கரவந்தபுரம்' என்றும் 'களக்குடி' என்றும் குறிப்பிடுவது இவ்வூர் உள்ளடக்கிய பகுதியினையே ஆகும் என்று அறிஞர்கள் கருதுவர். உக்கிரன்கோட்டையில் உள்ள கல்வெட்டுகள் அப்பகுதியினைக் 'களக்குடி நாட்டுக் கரவந்தபுரம்' என்று குறிப்பிடுகின்றன.

களக்குடியில் உள்ள கல்லணை ஒன்று பழைய கோயில் ஒன்றிலிருந்து கொண்டு வரப்பட்ட கருங் கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. அவ் வகையில் கோயிலின் பகுதிகளும் துண்டுக் கல்வெட்டுகள் பலவும் உள்ளன. அக்கல்வெட்டு களுள் ஒன்று வட்டெழுத்துக் கல்வெட்டாகும்.

இவை தவிர உக்கிரன்கோட்டையில் ஓரிடத்தைத் தோண்டிய போது கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் கலை அமைப்புகளுடன் திகழ்கின்ற பிராமியின் சிற்ப மொன்றும், கி.பி. 12-ஆம் நூற்றாண்டினைச் சார்ந்த சமணச் சிற்பமொன்றும் வெளிப்படுத்தப்பட்டது.

## 14. காரிசாத்தான்

இவ்வூர் சங்கரன்கோவில் வட்டத்தில் உள்ளது. இவ்வூரின் பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கட் தாழிகள், சீனத்துப்பானை ஓடுகள் மற்றும் மணிகள் (Beads) பல கிடைத்துள்ளன. சீனத்துப் பானை ஓடுகள் இங்கு கிடைத்திருப்பதால், முற்காலத்தில் இது ஒரு வணிகத்தலமாக விளங்கியிருக்க வேண்டும். தற்போது தொன்மைச் சான்றுகள் ஏதும் காணப்பட வில்லை. காலப்போக்கில் அவை அழிந்துபட்டிருக்க வேண்டும்.

## 15. காருக்குறிச்சி

இவவூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பா சமுத்திரத்திற்குத் தென்கிழக்கே திருநெல்வேலி-அம்பா சமுத்திரம் பெருவழியில் அமையப் பெற்றுள்ளது. வடக்குக்காரக்குறிச்சி என்றும் தெற்குக்காருக்குறிச்சி என்றும் இரு பகுதிகளாக உள்ளது. வடக்குக்காருக் குறிச்சியில் வரதராஜப் பெருமாள் கோயில், குலசேகர நாதர் கோயில், சாஸ்தாகோயில் ஆகியன உள்ளன.

வரதராஜப் பெருமாள் கோயிலில் முதலாம் மாற வர்மன் சுந்தர பாண்டியனின் (1216-1244) 20-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூர் 'முள்ளிநாட்டு ராஜராஜ சதுர்வேதி மங்கலம்' எனக் குறிப்பிடப்படுகின்றது. மற்றொரு கல்வெட்டு இறைவனை 'சுந்தரபாண்டிய விண்ணகராழ்வார்' எனக் குறிப்பிடுகின்றது.

குலசேகரநாதர் சிவன் கோயிலில் கோனேரின்மை கொண்டான் எனத் தொடங்கும் கல்வெட்டில் இவ்வூர் ''காரிக்குறிச்சி எனும் சுந்தரபாண்டிய நல்லூர்' என்றும் இறைவன் 'குலசேகரீஸ்வரமுடையநாயனார்' என்றும் குறிப்பிடப்படுகின்றன. இவ்வூரின் சாஸ்தா கோயிலுக்கருகில் ஒரு பாறையில் பொறிக்கப் பட்டுள்ள வீரபாண்டியனின் 3-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும் இவ்வூர் 'காரிக்குறிச்சி' என்றே குறிக்கப்பட்டுள்ளது. பிற்காலப்பாண்டியர் காலத்தில் இருந்த இப்பெயரே தற்போதும் இவ்வூருக்கு வழங்கப் பட்டு வருகிறது. நாதஸ்வர வித்துவான் காருக்குறிச்சி அருணாசலம், இவ்வூரில் பிறந்தவர் என்பது குறிப் பிடத்தக்கது.

## 16. கிரியம்மாள்புரம்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ள சேரன்மாதேவிக்குத் தெற்கே சுமார் 2.5 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது.

இவ்வூர் பிற்காலப் பாண்டியர் காலத்தில் சிறப்புற்று விளங்கியமையினை இவ்வூரிலுள்ள அரிகேசரி நாதர் சிவன் கோயில் எடுத்தியம்புகின்றது. இக் கோயிலில் மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் (திருமகள் ஜெயமகள்) 8-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மாறவர்மன் சீவல்லபன் (பூமகள் ஜெயமகள்) 13-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, சடாவர்மன் குலசேகர பாண்டியனின் 4-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, மாறவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் குலசேகர பாண்டியன் மற்றும் வீரபாண்டியன் ஆகியோரின் கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "அரிகேசரிநல்லூர்" என்றும் இறைவன் அரிகேசரிஈஸ்வரமுடைய நாயனார் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

## 17. கிருஷ்ணாபுரம்

இவ்வூர் பாளையங்கோட்டை வட்டத்தில், பாளையங்கோட்டையிலிருந்து 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வழகிய சிற்றூர் விசுவநாத நாயக்கர் மகனான கிருஷ்ணப்ப நாயக்க மன்னன் (கி. பி. 1564 - 1572) காலத்தில் உருவாக்கப்பட்டு இம்மன்னனின் பெயராலேயே அழைக்கப்படுகின்றது.

கிருஷ்ணப்ப நாயக்கர் இவ்வூரில் ஓர் அழகிய பெருமாள் கோயிலையும் எழுப்பியுள்ளார். இக்கோயில்

நாயக்கர் காலக் கட்டடக் கலை அழகிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இக்கோயிலின் கருவறையும் அர்த்த மண்டபமும் மிக நுணுக்கமான கட்டடக் கலை அமைப்புடன் உருவாக்கப்பட்டுள்ளன.

இக்கோயிலில் அழகிய சிற்பங்களுடன் வடிக்கப் பட்டுள்ள "ரங்கநாத மண்டபம்" நாயக்கர் காலச் சிற்பக் கலைக்கூடமாகவே காட்சியளிக்கின்றது. இச்சிற்பங்களில் நரம்புகளையும், கை, கால் நகங் களையும் மிக நுணுக்கமாகச் சிற்பி வடித்துள்ளான். இச்சிற்பங்களில் காணப்படும் அழகிய அணிவகைகள் நாயக்கர்கால அணிகலன்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

குறத்தி ஒரு குழந்தையைக் கடத்திச் செல்வது போன்ற சிற்பமும், அதே நேரத்தில் குழந்தையைத் தவறவிட்டதில் தன் குழந்தை எங்கே இருக்கிறது என்று சோதிடரிடம் கேட்பது போன்ற சிற்பமும் சிறந்த கற்பனையுடன் அழகாக வடிக்கப்பட்டுள்ளன. அதே நேரத்தில் குழந்தையைத் தேடி வரும் குதிரை வீரனின் சிற்பமும் சிறப்புடன் வடிக்கப்பட்டுள்ளது. மற்றொரு சிற்பத் தொகுதி குறவன் ஒருவன் அரச குமாரியைத் தூக்கிச் செல்வது போன்று உருவாக்கப் பட்டுள்ளது. இச்சிற்பங்கள் காண்போர் மனதை ஈர்க்கும் வண்ணம் உருவாக்கப்பட்டுள்ளன.

கிருஷ்ணப்பநாயக்கர் தன் தந்தை விசுவநாத நாயக்கர் பெருமைக்காக இக்கோயிலை எழுப்பின தாகக் கூறுகின்றார். கல்வெட்டில் இவ்வூர் 'கிருஷ்ணா புரம்' என்றும் இறைவன் 'திருவேங்கடநாத தேவர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.




இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள விசயநகர வேந்தரான ஸ்ரீரங்கதேவ மகாராயர் (கி. பி. 1578 - 1586) கல்வெட்டு வீரப்பநாயக்கர் அவரது தந்தை கிருஷ்ணப்பநாயக்கர் பெயரால் 'திருவேங்கட நாதருக்குக்' கொடையளித்ததைக் குறிப்பிடுகின்றது. கிருஷ்ணப்பநாயக்கர் இக்கோயிலுக்கு அரியகுளம், புத்தனேரி, கொடிக்குளம் போன்ற பல கிராமங்களைத் தானமாகக் கொடுத்ததை வீர ஸ்ரீசதாசிவதேவமகாராயர் [சகம் 1485 - கி. பி. 1563] கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது. மேலும் கிருஷ்ணப்ப நாயக்கரின் வேண்டுகோளின் படி சதாசிவராயர் இக்கோயிலுக்குக் கொடை கொடுத்ததனை சதாசிவராயரின் [சகம் 1489- கி.பி. 1567] செப்பேடு கூறுகின்றது.

## 18. கீழநத்தம்

இவ்வூர் பாளையங்கோட்டைக்கு வடகிழக்கே 5 கி. மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர்ப் பகுதியில் பண்டைய தாழிகள் கிடைத்துள்ளன. இவற்றோடு கருப்பு-சிவப்பு வண்ணப் பானை ஓடுகளும் ஏராளமாகக் கிடைத்துள்ளன. இவை தவிர இரும்பு மற்றும் வெண்கலத்தாலான பொருட்களும் கிடைத்துள்ளன. இவற்றில் இரும்பிலான தட்டைப் போன்ற அமைப்புடைய சிறிய விளக்கு ஒன்று குறிப்பிடத்தக்கதாகும். மேலும் தங்கத்தினாலான காதணியும், குழிவான பானை மூடியும் கிடைத்துள்ளன. இப்பகுதியில் முழுமையான எலும்புக் கூடு ஒன்றும் கிடைத்துள்ளது. இவை இவ்வூரின் பழமையைச் சுட்டும் அரிய சான்றுகளாகத் திகழ்கின்றன.

இவ்வூரில் பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியுடன் திகழும் சிவன் கோயில் ஒன்றும் உள்ளது.

## 19. கீழப்பாட்டம்

கீழப்பாட்டம் எனும் கிராமம் பாளையங்கோட்டையிலிருந்து 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. பாளையங்கோட்டையிலிருந்து கான்சாபுரம் செல்லும் சாலையில் சென்று இவ்வூரினை அடையலாம். இவ்வூரின் வடக்குப் பகுதியில் ஒரு சிறிய மேட்டின் மேல் எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகர பாண்டியனால் எடுப்பிக்கப்பெற்ற சிவன் கோயில் ஒன்று அமைந்துள்ளது. இக்கோயிலில் இம்மன்னனின் 13-ஆவது ஆட்சியாண்டுக் (கி.பி. 1291) கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூர்ப் பெயர் ‘மகுதாண்டநம்பிக்குறிச்சி’ எனவும் இறைவனின் பெயர் ‘கோமீஸ்வரமுடைய நாயனார்’ என்றும் குறிப்பிடப்படுகின்றன. தற்பொழுது இறைவன் (பாண்டீஸ்வரமுடையார்) என்று அழைக்கப்படுகிறார்.

சிவன் கோயிலினை அடுத்து அதன் பக்கத்தில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் எடுப்பிக்கப்பட்ட அம்மன் கோயில் ஒன்று உள்ளது. இவ்விரு கோயில்களைத் தவிர இவ்வூரில் பழமையான சான்றுகள் ஏதும் காணப்படவில்லை.

## 20. கீழப்பாவூர்

இவ்வூர் தென்காசி வட்டத்தில், தென்காசிக்குக் கிழக்கே பாவூர் சத்திரத்திற்கு வடக்கே அமைந்துள்ளது. இவ்வூரில் திருவாலீஸ்வரர் சிவன் கோயில், வெங்கடாசலபதி பெருமாள் கோயில் ஆகிய இரு கோயில்கள் உள்ளன. இவ்விரு கோயில்களும் பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியை எடுத்தியம்புவதாக உள்ளன. சிவன் கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், குலசேகர பாண்டியன்

(எம்மண்டலமும் கொண்டருளிய), சடாவர்மன் வீர பாண்டியன் (திருமடந்தையும், செயமடந்தையும்) ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் குருமறைநாட்டு முனை மோகர் பாகூர் என்னும் சத்தியசிகாமணிநல்லூர்'' என்றும் இறைவன் ''திருக்காவலீஸ்வரமுடைய நாயனார்'' என்றும் குறிப்பிடப்படுகின்றன. குலசேகரபாண்டியனின் கல்வெட்டு திருநெல்வேலியில் வடக்குத் தெருவிலுள்ள ''சைவப்பெருமாள் மடம்'' எனும் மடத்திற்குக் கொடை கொடுக்கப்பட்டதனைக் குறிப்பிடுகின்றது. கொல்லம் 560-ல் (கி.பி. 1384) பொறிக்கப்பட்டுள்ள ஒரு கல்வெட்டு இடிந்து விழுந்த இக்கோயிற் கருவறையின் தென்புறச்சுவர் திரும்பக் கட்டப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.

பெருமாள் கோயிலில் மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் (திருமகள், ஜயமகள்) கல்வெட்டும், மாறவர்மன் சீவல்லபனின் கல்வெட்டும் பொறிக்கப் பட்டுள்ளன. விக்கிரமபாண்டியனின் கல்வெட்டு முனைவது மோகர் எனும் தென்னவன் பட்டுதவிகள் எனும் படையினைக் குறிப்பிடுகின்றது. கல்வெட்டில் இறைவன் ''முனைகடி விண்ணகராழ்வார்'' எனக் குறிப்பிடப்படுகிறார்.

## 21. கீழாம்பூர்

அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பாசமுத்திரத் திற்கு மேற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமையப்பெற்றுள்ளது. இவ்வூரில் புதிய கற்காலக் கருவி (Neolithic celt) ஒன்று தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறையினால் கண்டுப்பிடிக்கப் பட்டுள்ளது. திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட

வரலாறு நுண்கற்காலத்திலிருந்துதான் சான்றுகள் கிடைப்பதாக இது நாள்வரை தொல்லியல் மற்றும் வரலாற்று அறிஞர்களால் நம்பப்பட்டு வந்தது. ஆனால் இங்கு முதன் முறையாகப் புதிய கற்காலக் கருவி கிடைத்ததன் மூலம் இப்பகுதியின் பண்டைய வரலாறு புதியகற்காலத்திலேயே தொடங்கப்பட்டு விட்டதனை உணர்கிறோம். மேலும் இவ்வூரில் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற் காலத்தினைச் சார்ந்த ஈமத்தாழியும் காணப்படு கின்றது. புதிய கற்கால மக்கள் பெருங்கற்காலச் சான்றுகளைத் தன்னகத்தே கொண்டிருப்பதன் மூலம் இவ்வூர் சிறப்புப் பெறுகின்றது.

## 22. குற்றாலம்

தென்காசி வட்டத்தில், திருநெல்வேலிக்கு மேற்கே 58 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூர்ப் பகுதியில் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்காலச் சின்னங்களான ஈமத்தாழிகள் கிடைத் துள்ளன. ஒவ்வோர் ஆண்டும் லட்சக்கணக்கான இந்தியர்களை மட்டுமன்றி வெளிநாட்டுப் பயணி களையும் ஈர்க்கும் வண்ணம் இங்கு விழும் கண்கவர் அருவிகள் தென்தமிழ் நாட்டிற்கே சிறப்பினைக் கொடுக்கும் வண்ணம் அமைந்துள்ளன. இப்பகுதியி லுள்ள பொதிகை மலையில் அகத்தியர் தவமிருந்த தாக நம்பப்பட்டு வருகிறது. இது ஒரு பாடல் பெற்ற தலமாகும். இங்குள்ள சிவன்கோயிற் கல்வெட்டு களில் இவ்வூர் ''தென்வாரநாட்டுத் திருக்குற்றாலச் சதுர்வேதிமங்கல'' மென்றும், இறைவனின் பெயர் ''குறும்பலா ஈசர்'' என்றும், ''திருக்குற்றாலநாதர்'' என்றும், ''திருக்குற்றாலமுடையநம்பிரானார்''

என்றும் குறிப்பிடப்படுகின்றன. இச்சிவன் கோயிலில் மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் (திருமலர்மாது) 5-ஆவது ஆட்சியாண்டு, சடாவர்மன் வீரபாண்டியனின் (திருவளர்முலை) 3-ஆவது ஆட்சியாண்டு, குலசேகர பாண்டியன் (எம்மண்டலமும் கொண்டருளிய) 9 மற்றும் 11-ஆவது ஆட்சியாண்டு சடையமாறன் ஆகிய பாண்டியர் கல்வெட்டுகளும், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் ஆகிய சோழர் கல்வெட்டு களும் பொறிக்கப்பட்டுள்ளன. பிரதான அருவி (Main Falls) பழைய குற்றால அருவி (Old Falls) புலி அருவி, சிற்றருவி, செண்பகா அருவி, தேன் அருவி, சாமியார் அருவி போன்றவை மேற்கு மலைத் தொடர்ச்சியிலிருந்து உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் விழுகின்றன. ஆடவல்லானின் ஐந்து சபைகளுள் சித்ரசபை இங்கு அமையப் பெற்றுள்ளது. ஆடவல்லானின் திரிபுரத்தாண்டவம் இங்கே நடைபெற்றதாகத் திருப்பத்தூர்ப் புராணம் வாயிலாக அறியலாம். பராக்கிரம பாண்டியன் (1422-1463), சித்ரசபையைக் கட்ட ஆரம்பித்தான். இப்பகுதியின் தொன்மை வரலாற்றினையும், நாட்டுப் புறக் கலைகளையும் விளக்கும் வண்ணம் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை அகழ்வைப்பகம் ஒன்றினைக் குற்றாலம் பேருந்து நிலையத்திலிருந்து பிரதான அருவிக்கு செல்லும் பாதையில் அமைத் துள்ளது.

## 23. குன்றத்தூர்

இவ்வூர் திருநெல்வேலி நகரத்திலிருந்து 5 கி..மீ. தொலைவில் அமைந்துள்ளது. இக்கிராமத்தின் அருகில் சிறு மண் குன்று ஒன்று உள்ளதால் இவ்வூர் குன்றத்தூர் எனப் பெயர் பெற்றது. இக் "குன்றத்தூர்ப் பொற்றை" 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தருவைக் கல்வெட்டு ஒன்றிலும், செங்காணி

என்ற ஊரில் காணப்படும் 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வீரபாண்டியன் கல்வெட்டுகளிலும் குறிப்பிடப் படுகின்றது. இப்பகுதியில் சுமார் 2000 ஆண்டு களுக்கு முற்பட்ட பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன.

## 24. கோட்டைக்கருங்குளம்

இவ்வூர் நாங்குநேரி வட்டத்தில் வள்ளியூரிலிருந்து கிழக்கே 17 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

கோட்டை என்ற சொல் இவ்வூரில் கோட்டை ஏற்பட்ட காலத்திற்குப் பின்பே கருங்குளம் என்ற பெயரோடு சேர்த்து அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இம்மாவட்டத்திலுள்ள கருங்குளத்திலிருந்து வேறு படுத்திக் காட்டுவதற்காகவும் கோட்டை என்ற சொல் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். ஆரம்ப காலத்தில் கருங்குளம் என்றும் சீகாந்தநல்லூர் என்றும் அழைக் கப்பட்டிருக்கிறது. 'சீகாந்தம்' என்பது 10-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆட்சி செய்த மூன்றாம் இராசசிம்ம பாண்டியனின் பட்டப்பெயர்களுள் ஒன்றாகும். இப்பட்டப்பெயரின் அடிப்படையிலேயே இவ்வூர் சீகாந்தநல்லூர் என்ற பெயரினைப் பெற் றுள்ளது. இம்மன்னனின் சிறப்புப் பெயரைப் பெற் றிருப்பதால் இவ்வூரும் 10-ஆம் நூற்றாண்டின் தொடக்கக் கால்த்திலேயே இருந்திருக்க வேண்டும் என்று கருதலாம்.

இவ்வூரின் வடபகுதியில் சிவன் கோயில் அமைந் துள்ளது. இக்கோயிலில் மொத்தம் பதினெட்டுக் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மாறஞ்சடையனின் கல்வெட்டு பழமையானதாகும்.

அடுத்து இராசர்ாச சோழனின் 19ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, சடாவர்மன் குலசேகரனின் 14ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, மாறவர்மன் சுந்தர பாண்டியனின் ஆறு கல்வெட்டுகள், எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரனின் 40ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மற்றும் மன்னன் பெயரில் காணப்படும் மூன்று கல்வெட்டுகளும் உள்ளன. இக்கல்வெட்டுகள் இக்கோயிலுக்குத் தானம் கொடுக்கப்பட்டதனைத் தெரிவிக்கின்றன.

இவ்வூர் 12-ஆம் நூற்றாண்டில், குலசேகர பாண்டியன் காலத்தில் 'கருங்குளமான கரிகால சோழ நல்லூர்' என்று அழைக்கப்பட்டிருக்கின்றது. குலசேகரனின் 14-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு 'இராசசிங்கேஸ்வர சதுர்வேதி மங்கலம்' என்று இறைவன் பெயரிலேயே இவ்வூரின் பெயரும் மாற்றப்பட்டிருப்பதைக் காட்டுகிறது. இறைவனின் பெயர் 'இராசசிங்கேசுவரமுடையநாயனார்' என்பதாகும். இராசராசன் காலத்தில் இவ்விறைவன் 'இராசசிங்கேசுவரமுடைய படாரகர்' என்று குறிப்பிடப்பட்டுள்ளார்.

கோயிலின் காலத்தைக் கணிப்பதற்கு இக்கோயிலைப் பொறுத்தவரை ஊரின் பெயரும், இறைவனின் பெயரும் கோயிலில் காணப்படும் ஒரு கல்வெட்டும் உதவுகின்றன. இராசசிம்ம பாண்டியன் கி. பி. 900ல் பட்டம் எய்தியவன். இவன் மாறன் சடையன் ஆவான். இவனது கல்வெட்டு இக்கோயிலின் வடபுற அதிட்டானத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. ஆகையால் இராசசிம்மபாண்டியன் காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கூறலாம். முன்மண்டபம் மகாமண்டபம் அதிட்டானத்திற்கு மேல் உள்ள பகுதி ஆகியன சுந்தரபாண்டியன் காலத்தில் வேளான் ஆரியான் என்ற ஆலாலசுந்தரபிள்ளையால்

கட்டப்பட்டுள்ளது. அம்மன் கோயில் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம் என்பதை அதன் அமைப்பைக் கொண்டு கூறலாம்.

இவ்வூரில் ஐயனார் கோயில் ஒன்றும் உள்ளது. அக்கோயிலில் உள்ள ஐயனாரின் கற்சிலை பார்ப்போர் வியக்கும் வண்ணம் கலையழகுடன் வடிக்கப்பட்டுள்ளது. இவ்வழகுச்சிலை இராசராசன் காலத்தில் செதுக்கப்பட்டிருக்கலாம்.

இவ்வூரின் சில இடங்களில் பெருங்கற்காலத்தினைச் சார்ந்த சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட கருப்பு சிவப்புப் பானை ஓடுகளும் கிடைத்துள்ளன.

## 25. கோவில்குளம்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ளது. இவ்வூரிலுள்ள தென்னழகர் கோயில் இவ்வூரின் வரலாற்றுச் சான்றாகத் திகழ்கின்றது. இக்கோயிலில் சடாவர்மன் குலசேகரபாண்டியனின் 13-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, சடையமாறனின் 21-ஆவது ஆட்சியாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு, மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் (கி. பி. 1282-1433) 4-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஆகியன பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் ''முள்ளி நாட்டு பிரம்மதேயம் ராஜராஜச் சதுர்வேதி மங்கலம்' என்றும் ''முள்ளிநாட்டுக் குளம்'' என்றும் இறைவன் ஸ்ரீபதி விண்ணகரெம் பெருமான்'' என்றும் ''சுந்தரத் தோள் எம்பெருமான்'' என்றும் குறிப்பிடப்படுகின்றன. இவ்வூர் முதலில் ''முள்ளிநாட்டுக்குளம்'' ஆக இருந்து பின் இராஜராஜச் சதுர்வேதிமங்கலமாக'' மாறித் தற்போது 'கோவில்குளம்' என வழங்கப்பட்டு வருகிறது.

## 26. சங்கரநயினார் கோவில்

இவ்வூர் திருநெல்வேலி - இராஜபாளையம் செல்லும் சாலையில் திருநெல்வேலிக்கு வடமேற்கே அமைந்துள்ளது.

இது ஒரு புகழ் பெற்ற தலமாகும். ஒரே வளாகத்தில் மூன்று கோயில்கள் உள்ளன. இக்கோயில் விக்கிரமபாண்டியனால் எழுப்பப்பட்டது என்று மக்கள் வழக்கு கூறுகிறது.

ஆனால் தற்பொழுது உள்ள கோயில் பகுதி தென்காசிப் பாண்டியர்களால் உருவாக்கப்பட்டதாகும். தென்காசிக் கோயிலை எடுப்பித்த பராக்கிரம பாண்டியன் (கி.பி.1422-1463) காலத்தில் இக்கோயில் எழுப்பப்பட்டது.

இக்கோயிலிலுள்ள பெரும் மரக்கதவுகளும், புலித்தேவன் அறையும் அழகிய மரச்சிற்பங்களைக் கொண்டு விளங்குகின்றன. இக்கோயிலின் வாயிலில் 9 கலசங்களுடன் கூடிய 9 நிலை இராசகோபுரம் அழகிய சிறிய சிற்பங்களைக் கொண்டு விளங்குகின்றது.

## 27. சிங்கிகுளம்

திருநெல்வேலியிலிருந்து 27 கி.மீ. தொலைவில் ப்ச்சையாற்றங்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள சிறுமலையில் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன.

மேலும், இவ்வூரிலுள்ள கைலாசநாதர் கோயில், பகவதி அம்மன் கோயில் ஆகியன வரலாற்றுச் சிறப்பை விளக்கும் கல்வெட்டுகளைக் கொண்டு விளங்குகின்றன. கைலாசநாதர் கோயிலில் மொத்தம் பன்னிரண்டு கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பழமையானது முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டாகும். இம்மன்னது பெயரைத் தாங்கி மொத்தம் ஐந்து கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் இவ்வூர் 'குளமான ராஜ ராஜபுரம்' என்றும் இறைவன் 'குலசேகரஈஸ்வரமுடைய நாயனார்' என்றும் குறிப் பிடப்பட்டுள்ளன.

சுவாமி கோயிலுக்குத் தென்புறத்தில் மேற்கு நோக்கிய நிலையில் அம்மன் கோயில் அமைந்துள்ளது. இதில் கல்வெட்டுகள் ஏதுமில்லை. தற்பொழுது இங்கு எழுந்தருளியிருக்கும் அம்மன் 'ஆவுடையம்பாள்' என்று பெயர் பெற்றுள்ளது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்திலேயே இங்கு அம்மன் கோயிலும் இருந்தது என்பதனை அவனது கல்வெட்டு ஒன்றின் மூலம் அறிகின்றோம். இக்கல்வெட்டு இவ்வூரிலுள்ள தேவரடியாருள் ஒருத்தி அம்மன் கோயிலினை எழுப்பிய தாகக் கூறுகிறது. மேலும் அம்மன் பெயர் 'காமக் கோட்டமுடைய நாச்சியார்' என்றும் குறிப்பிடுகிறது.

பகவதி அம்மன் கோயில் உள்ள முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு, இக்கோயில் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. இருப்பினும் அக் கல்வெட்டு, திடியூர் அருகில் 'ஜைனகிரி மாமலை என்ற ஒரு குன்று இருந்ததாகவும், அம்மலையில் 'நியாயபரிபாலனப் பெரும்பள்ளி' என்ற ஒரு சமணக் கோயில் இருந்ததாகவும் குறிப்பிடுகிறது. அக் கோயிலில், 'எனக்கு நல்ல நாயகர், என்ற எழுந் தருளுந்திருமேனிக்குப், பள்ளிச் சந்தமாக மதிசாவரன்




ஆதிப்ட்டாரகள் என்பவன் நிலம் வழங்கியதையும் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு அப்பகுதி மக்களால் சமண மதமும் பின்பற்றப்பட்டதற்குச் சான்றாக விளங்குகின்றது.

இக்கோயில்களைத் தவிரப் பச்சையாற்றில் உள்ள 'வழுக்குப்பாறை' என்ற பாறையிலும் மூன்று கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் இரண்டு ஆற்றிலிருந்து நிலங்களுக்குத் தண்ணீர் பாய்வதற்காகக் கால்வாய்கள் வெட்டி அமைக்கப் பட்டதைக் கூறுகின்றன. ஒன்று கைலாசநாதர் கோயிலுக்குப் பன்னிரண்டு விளக்குகள் வைப்பதற் காக இருபது பணம் தானமாக வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.

## 28. சீவலப்பேரி

இவ்வூர் பாளையங்கோட்டை வட்டத்தில் உள்ளது. சீவலப்பேரியிலிருந்து 4 கி.மீ. தொலைவில் "மறுகால் தலை" எனும் கிராமம் அமைந்துள்ளது. இக்கிராமம் சீவல்லபப்பேரேரி என்றும் ஏரியின் மறுகால் அருகில் அமைந்துள்ளமையால் "மறுகால்தலை" என்றும் பெயர் பெற்றது. இங்கு சிறு குன்று ஒன்று உள்ளது. இக்குன்று "மறுகால்தலை மலை" என்று அழைக்கப் படுகிறது.

இம்மலையின் தென்பகுதியில் தெற்குத் திசை யினை நோக்கிய நிலையில் இயற்கையாக அமைந் துள்ள குகை ஒன்று காணப்படுகின்றது. இதில் சமண முனிவர்களுக்காக அமைக்கப்பட்ட கற்படுக்கைகள் காணப்படுகின்றன. இக்குகையின் மேற்கு பகுதியில் ஏழு படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. இப்படுக்கை யின் மேற் பகுதியில் தலை வைத்துப்படுப்பதற்கு

வசதியாக திண்டு போன்று அமைக்கப்பெற்றுள்ளது. படுக்கின்றவர்கள் கால் வைத்துக் கொள்வதற்கு வசதியாகக் கால் பகுதியில் குமிழ்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இப்படுக்கைகளை உருவாக்கித் தானமாக வழங்கியவனின் பெயர் தமிழ் எழுத்தில் குகையின் மேற்பகுதியின் முகப்பில் வெட்டப்பட்டுள்ளது. மழை பெய்யும் பொழுது தண்ணீர் உள்ளே வடிந்துவிடாமல் இருப்பதற்காக பாறை விளிம்பில் காடி வெட்டப்பட்டுள்ளது.

### தமிழ்க் கல்வெட்டு

இதனை அறிஞர்கள் "வெண்காசிபன் குடுபித கல்கஞ்சனம்" எனப் படித்துள்ளனர். வெண்காசிபன் என்பவன் இக்கற்படுக்கைகளை செய்து கொடுத்தான் என்று பொருள்படும்.

கிழக்குப் பகுதியில் காணப்படும் முடிக்கப்பெறாத படுக்கைகளின் மேற்பகுதியில் 18-ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியை உடைய கல்வெட்டு "சுவாமி அழகிய அம்" என வெட்டப்பட்டுள்ளது. இது கொடுத்தவர் பெயரையோ அல்லது தங்கியிருந்த சமண முனிவர் பெயரையோ குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

இவ்வூரிலுள்ள அழகர் கோயிலில் சடையமாறன் எனும் பாண்டிய மன்னன் மற்றும் முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன், முதலாம் குலோத்துங்கன், முதலாம் வீரராசேந்திரன் ஆகிய சோழ மன்னர்களின் கல்வெட்டுக்களும், சடாவர்மன் சுந்தர சோழ பாண்டியனின் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் இவ்வூர், "தென் திருமாலிருஞ்சோலை" என்றும், இறைவன் "நின்றருளின கருமாணிக்கத் தேவர்" என்றும், "நின்றருளின கருமாணிக்க ஆழ்வார்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 29. சுத்தமல்லி

திருநெல்வேலி வட்டத்தில் திருநெல்வேலிக்குத் தென்மேற்கே சுமார் 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

இவ்வூரில் இரு சிவன் கோயில்கள் உள்ளன. இவற்றில் ஒன்று பகவதீஸ்வரர் கோயிலாகும். இக் கோயிலில் மாறவர்மன் குலசேகரபாண்டியன் (எம் மண்டலமும் கொண்டருளிய கி பி. 1268-1308) முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சடாவர்மன் குலசேகரபாண்டியனின் கல்வெட்டுகளும் கோனேரின்மை கொண்டான் 10-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றும் பொறிக்கப்பட்டுள்ளன. இக் கல்வெட்டுகளில் இவ்வூர் "மேல்வேம்பு நாட்டு வீர விநோதசதுர்வேதி மங்கலம்" என்றும், இறைவன் "பகவதி ஈஸ்வரமுடையார்" என்றும் குறிப்பிடப் படுகின்றன.

இதே ஊரில் தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள மற்றொரு சிவன் கோயிலில் வீரகேரள குலசேகரதேவர் கல்வெட்டும், கோனேரின்மை கொண்டான் கல்வெட்டொன்றும் பொறிக்கப் பட்டுள்ளன. இக்கல்வெட்டில் இவ்வூரின் பெயர் "உதையமார்த்தாண்ட சதுர்வேதி மங்கல" மென்றும் இறைவன் அங்குதீஸ்வரமுடைய நாயனார் என்றும் குறிப்பிடப்படுகின்றன. பிற்காலப் பாண்டியர் காலத்திலிருந்து வீரகேரளகுலசேகரதேவர் காலம் வரை இவ்வூர் சதுர்வேதி மங்கலமாகவே இருந்துள்ளது.

## 30. சேரன்மாதேவி

இவ்வூர் திருநெல்வேலிக்கு மேற்கே சுமார் 16 கி.மீ. தொலைவில் தாமிரபரணி ஆற்றில் தென் கரையில் அமையப்பெற்றுள்ளது. வடதமிழ் நாட்டின் காஞ்சிபுரத்தைப்போல் தென் தமிழ்நாட்டில் சேரன் மாதேவி கோயில்கள் நிறைந்து விளங்குகின்றது. (Temple city). இக்கோயில்கள் சோழர் மற்றும் பாண்டியர் காலத்தில் எடுப்பிக்கப்பட்டனவாகும்.

இராமநாதசுவாமி கோயில், அம்மநாதசுவாமி கோயில் மற்றும் தெய்வீஸ்வரமுடையார் கோயில் ஆகியன சோழர்காலக்கோயில்களாகும். இராமசுவாமி கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள முதலாம் இராச ராசனின் 24-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவ்வூர் 'சேரமான் மகாதேவி சதுர்வேதி மங்கலம்' என்று குறிப்பிடப்படுகின்றது. இதே மன்னனின் இதே ஆட்சியாண்டு வட்டெழுத்துக் கல்வெட் டொன்று இவ்வூரினை 'நிகரிலிச்சோழச் சதுர்வேதி மங்கலம்' என்றும் குறிப்பிடுகின்றது. முதலாம் இராசேந்திரசோழனின் 3 - வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றும் இப்பெயர்களையே குறிப்பிடு கின்றது. இதிலிருந்து இராசராசனின் ஆட்சியின் பிற்பகுதியில் இவ்வூர் பெயர் மாற்றம் அடைந் துள்ளதை அறியலாம். இராமசுவாமி கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள பிற்காலப் பாண்டியர் கல்வெட்டு களில் இவ்வூர் 'சேரமாதேவி சதுர்வேதிமங்கலம்' என்றும் இறைவன் 'வன துவரபதி ஆழ்வார்' 'வன துவரபதி எம்பெருமான்' என்றும் குறிப்பிடப் படுகின்றன.

ஊருக்கு வடகிழக்கே தாமிரபரணி ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ள அம்பலநாதேஸ்வரர்

அல்லது அம்மநாதசுவாமி கோயில் முதலாம் இராசராசனால் எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். இக் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள முதலாம் இராசராசனின் 28-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவ்வூர் 'முள்ளிநாட்டு பிரம்மதேயம் நிகரிலிச்சோழ சதுப்பேதி மங்கலத்து சோழேந்திரசிங்க ஈஸ்வரத்து . . . . . . .' என்றும் இறைவன் 'கைலாயமுடைய மகாதேவர்' என்றும் குறிப்பிடுகின்றது. இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள பிற்காலப்பாண்டியர் கல்வெட்டு களில் இவ்வூர் 'சேரவன் மாதேவி சதுர்வேதி மங்கலம்' என்றும் இறைவன் 'கைலாயமுடையார்' என்றும் 'கைலாசமுடைய நாயனார்' என்றும் குறிப்பிடுகிறது.

தெய்வீஸ்வரமுடையார் கோயிலின் அமைப்பு முதலாம் இராசராசன் கலைப்பாணியினை ஒத்து விளங்குவதால் இக்கோயில் அவனாலேயே எழுப்ப பட்டிருக்கலாம். இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் இவ்வூர் 'சேரவன்மஹாதேவி சதுர்வேதிமங்கலம் என்றும் 'தெய்வீஸ்வரமுடையார்' 'தெய்வீஸ்வரமுடைய நாயனார்' மற்றும் தேவியம்மை ஈச்வரமுடையார்' என்றும் குறிப்பிடப்படுகின்றது.

சேரன்மாதேவியில் உள்ள கோயில்களில் முதலாம் சடாவர்மன் குலசேகரபாண்டியன், மாறவர்மன் சீவல்லபன் (பூமகள் ஜெயமகள்), முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சடாவர்மன் வீரபாண்டியன் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி. 13-ஆம் நூ. ஆ) ஆகிய பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

## 31. தளபதிசமுத்திரம்

திருநெல்வேலி - நாகர்கோவில் நெடு வழியில் நான்குநேரியை அடுத்து தளபதிசமுத்திரம் எனும் ஊர் உள்ளது. இவ்வூரின் பழம்பெயர் பெரும்பழஞ்சி என்பதாகும். நம்பித்தலைவன் பட்டயம் என்ற ஊர் அருகே உள்ள மகாதேவர்க்கு தானம் வழங்கிய செய்தியினை இங்குள்ள சிவன் கோயிலில் பொறிக்கப் பட்டுள்ள சடாவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. மயிலாடுபாறை கோயில் இருக்கும் ஊரானது 'நாட்டாற்றம் போக்கு பராக்கிரமபாண்டிய சதுர்வேதிமங்கலம்' எனக் குறிப்பிடப்படுகின்றது. மயிலாடுபாறையுடைய மகாதேவர்க்கு இறையிலி தேவதானமாகக் கொடுக்கப்பட்ட நிலத்தைப் பற்றி அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில், திருக்குறுங்குடி, இராசாக்கள்மங்கலம் ஆகிய வரலாற்று சிறப்புடைய ஊர்ப்பெயர்களும் இடம் பெறுகின்றன.

## 32. தாமரைச்செல்வி

இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து 18 கி. மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரிலுள்ள கோயில்களுள் நல்லாட்சி அம்மன் கோயில் மட்டும் பழமையான தாகும். இக்கோயிலின் வடபுறத் திருச்சுற்றில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டுச் சிற்ப அமைதியினைக் கொண்டு விளங்கும் மகிஷாசுரமர்த்தினியின் சிற்பம் காணப்படுகின்றது. இச்சிற்பம் இக்கோயிலுக்குரிய தாகும். சிதைவுற்றதால் அதனை எடுத்துவிட்டுப் புதிய சிலையினை எழுந்தருளச் செய்துள்ளனர்.

இக்கோயிலுக்கருகில் சிவன் கோயில் ஒன்று இருந்து அழிந்துள்ளதை உணர்த்தும் வண்ணம்

கோயிலில் பல உறுப்புகள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. சிதறிய சிற்பங்களுள் ஒரு நந்தி அழகிய தோற்றமுடையதாகக் காணப்படுகின்றது. மற்றொரு நந்தியின் உருவமும் உள்ளது. நல்லாட்சி அம்மன் கோயில் வடபுறத் திருச்சுற்றில் சிதைந்த நிலையில் காணப்படும் ஆடவல்லானின் சிற்பம் இக்கோயிலுக்குரியதாக இருத்திருக்க வேண்டும். சிற்ப அமைதியினை நோக்கின் இது 17-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.

இவ்வூரின் ஓரிடத்தில் சக்கரக் கல் ஒன்று நடப்பட்டுள்ளது. அதில் ஊரின் பெயர்,

''மகிழலங்
கார நல்லூரான
தாமரைச்செல்வி''

என 19-ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் பொறிக்கப்பட்டுள்ளது.

## 33. தாருகாபுரம்

தென்காசி வட்டத்தில் தென்காசி - மதுரை சாலையிலுள்ள சுப்பிரமணியபுரம் என்ற ஊரிலிருந்து 3 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது.

இவ்வூரின் பழமைக்குச் சான்றாக இங்குள்ள சிவன் கோயில் விளங்குகின்றது. இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளில் இவ்வூர் 'மலையடிக்குறிச்சி' என்றும் இறைவன் 'கானகறுத்த மகாதேவர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், தற்பொழுது இவ்வூருக்கு அருகிலுள்ள மற்றொரு கிராமத்தினையே 'மலையடிக்குறிச்சி' என அழைக்கின்றனர். பாண்டியருக்கும் சேரருக்கும் இடையே ஏற்பட்ட பூசல் தீர இவ்விறைவன் உதவியதால் 'பிணக்கறுத்தவர்'

என்ப்பெயர் பெற்றுள்ளார் என்று கூறுகின்றனர். தற்பொழுது இவ்விறைவன் 'மத்தியஸ்த நாதர், என அழைக்கப்படுகிறார்.

இக்கோயில் தென்காசிப் பாண்டியர்களின் கட்டடக்கலைப்பாணியினைக் கொண்டு விளங்குகின்றது. ஆனால் மகாமண்டபம் பழைய அமைப்புடன் திகழ்கிறது. அம்மகாமண்டபத்தில் குலசேகர பாண்டியன், சுந்தரபாண்டியன் ஆகிய பாண்டிய மன்னர்களது கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. எனவே இக்கோயில் இடைக்காலப் பாண்டியர் காலத்திலேயே இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

இவ்வூர் தலைக்கோட்டை சமன் பகுதியைச் சேர்ந்ததாகும். இங்கு சமீன் பரம்பரையினர் வாழ்ந்து வருகிறார்கள்.

## 34. திருக்குறுங்குடி

இவ்வூர் நான்குனேரி வட்டத்தில், திருநெல்வேலிக்குத் தெற்கே சுமார் 35 கி.மீ. தொலைவில் நான்குநேரிக்கு அருகே அமைந்துள்ளது. குறுகிய வடிவினனான வாமனன் பிறந்த குடியாக இவ்வூர் கருதப்படுவதால் (குறுங்குடி) திருக்குறுங்குடி எனப் பெயர் பெற்றது. இது ஒரு சிறந்த வைணவத் தலமாகும். குறுங்குடி நம்பியைப் பெரியாழ்வார், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் மங்களாசாசனம் செய்திருக்கிறார்கள்.

இவ்வூர் அழகியநம்பி கோயிலின் உட்பிரகார வடபுறத்திலிருந்த மாறஞ்சடையனின் 4-ஆவது ஆட்சியாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றில் இவ்வூர் "வைகுண்டவளநாட்டு நாட்டாற்றுப் போக்கு பிரம்ம

தேயம்'' எனக் குறிப்பிடப்படுகின்றது. இக்கல்வெட்டு தற்போது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 13-ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டில் இவ்வூர் ''ராஜராஜ சதுர்வேதி மங்கலம்'' எனக் குறிப்பிடப்படுகின்றது.

திருவாங்கூர் மன்னன் வீரராமவர்மனின் (கி.பி. 1439-1468) செப்புப்பட்டயம் ஒன்று இவ்வூரினை ''வைகுண்டவளநாட்டு நாட்டாற்றுப்போக்கு திருக்குறுங்குடி'' என்றும் இறைவனை ''அழகியநம்பி'' என்றும் குறிப்பிடுகின்றது. இப்பட்டயம் இறைவன் உதயமார்த்தாண்டக் குடையின் கீழ், புஜபல வீர சௌந்தரராமவர்மன் பீடத்தின் மேல் அமர்ந்திருப்பதாகக் குறிப்பிடுகின்றது.

இவ்வூருக்குக் கிழக்கே உள்ள அய்யனார் கோயிலிலுள்ள கல்வெட்டு கிருஷ்ணப்ப நாயக்கர் (கி.பி. 1562-1572) விளக்குகள் தானமாகக் கொடுத்ததனைக் குறிப்பிடுகின்றது.

## 35. திருநெல்வேலி

இவ்வூர் திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் தலைநகராமாகும். இது ஒரு பாடல் பெற்ற தலமாகும். நெல்லையப்பர் கோயில் இங்குள்ள முக்கியமான கோயிலாகும். சோழர் கலையும், பாண்டியர் கலையும், சேரர் கலையும் ஒருங்கே விளங்கும் பெரிய கோயிலாகும். இக்கோயிலின் உட்பகுதியில் உள்ள சிறிய சிவன் கோயில் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் காலத்தில் (கி.பி. 946-966) கட்டப்பட்டதாகும். முதலாம் இராசேந்திரன் (கி.பி. 1012-1044), குலோத்துங்கன் (கி.பி. 1070-1120) ஆகிய

மன்னர்களது கல்வெட்டுகளும் இக்கோயிலில் பொறிக்கப்பட்டு உள்ளன. கல்வெட்டுகளில் இவ்வூர் 'கீழ் வேம்பு நாட்டுத் திருநெல்வேலி' என்றும் இறைவன் 'உடையார் ஸ்ரீ திருநெல்வேலி உடைய நாயனார்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இங்குள்ள பள்ளி கொண்ட பெருமாள் சன்னதி முதலாம் இராசராசன் காலத்தில் உருவாக்கப்பட்டதாகும்.

நெல்லையப்பர் கோயிலில் உள்ள இசைத்தூண் மண்டபம் சிறப்புடையதாகும். இம்மண்டபம் உதயமார்த்தாண்டன் காலத்தில் கட்டப்பட்டதாகும். கொடி மண்டபத்தில் உள்ள தூண்கள் கலையழகு வாய்ந்த சிற்பங்களைக் கொண்டு விளங்குகின்றன.

நடராசப்பெருமானின், ஆடல் காட்சியினை நிகழ்த்திக் காட்டுவதற்கென்று அமைந்துள்ள ஐந்து சபைகளுள் ஒன்றான 'தாமிர சபை' இக்கோயிலில் அமையப்பெற்றுள்ளது. இத்திருச்சபை கலையழகு வாய்ந்த சிறிய மரச் சிற்பங்களைக் கொண்டு விளங்குகின்றது.

இக்கோயில் உருவாவதற்கு காரணமான இராமக் கோனின் சிற்பம் திருச்சுற்று மாளிகையில் உள்ளது.

இவ்வூரிலுள்ள நரசிம்மப்பெருமான் கோயிலில் முதலாம் வரகுண பாண்டியனின் கல்வெட்டு (கி.பி. 769-770) பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூர் 'கீழ்வேம்பநாட்டுத் திருநெல்வேலி' என்றும், இறைவன் 'பிரம்மபுரித்தேவர்' என்றும் குறிப்பிடப் படுகின்றன. மதுரை விசயரங்க சொக்கநாத நாயக்கர் சகம் 1637 (கி.பி. 1715)-ல் திருநெல்வேலியிலுள்ள கிராமதேவதைக்குக் கொடை கொடுத்ததைச் செப்பேட்டுச் செய்தியிலிருந்து அறியலாம். மற்றொரு செப்பேடு இதே மன்னன் இவ்வூரிலுள்ள பள்ளிவாசல்

ஒன்றுக்குக் கொடை கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது. விசயநகர வேந்தரான முதலாம் வேங்கடபதி சகம் 1512 (கி.பி. 1590)-ல் கிருஷ்ணதாஸ் மேலாண்மையின் கீழிருந்த ஒரு வைணவ சன்னதிக்குக் கொடை கொடுத்ததையும் அறிகிறோம்.

## 36. திருப்புடைமருதூர்

திருப்புடைமருதூர் திருநெல்வேலி மாவட்டத்தில் வீரவநல்லூருக்கு வடக்கே 7 கி.மீ. தொலைவில் தாமிரபரணி ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது. இவ்வாற்றின் வளைவு ஒன்றில் கிழக்கு நோக்கிய வண்ணம் 'நரம்புநாதர்' என்றழைக்கப்படும் சிவன் கோயில் காணப்படுகின்றது. (இக்கோயிலின் கட்டடக் கலையினை நோக்கும் பொழுது இது முதலாம் இராசராச சோழனால் கட்டப்பட்டிருக்கலாம் என்று கருத இடமுள்ளது.

இக்கோயிலிலுள்ள சண்டேஸ்வரர் சன்னதியில் மேற்புறச்சுவரில் இம்மன்னது சிதைந்த, முழுமை பெறாத கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. இதே மன்னனின் மற்றுமொரு கல்வெட்டு 10-ஆவது ஆட்சியாண்டில் நிலம் கொடை கொடுத்ததைக் குறிப்பிடுகிறது. கீழ்ப்புறச்சுவரில் பொறிக்கப்பட்டுள்ள சடையவர்மனின் 20-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவ்வூர் 'பாண்டி மார்த்தாண்ட வள நாட்டுத் திருப்புடையமருதில்' எனக் குறிப்பிடப்படுகின்றது. கல்வெட்டில் இறைவன் "புத்தார் ஜுனேஸ்வரர் எனக் குறிப்பிடப்படுகின்றார்.

மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 32-ஆவது ஆட்சியாண்டுக் (எம்மண்டலமும் கொண்டருளிய) கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது. கொல்லம் 662-ல்

(கி.பி. 1486) பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்று இவ்வூரினை "முள்ளி நாட்டுத் திருப்புடைமருதூர்" என்றும் இறைவனை "நரம்பு கொண்டருளிய நாயனார்" என்றும் குறிப்பிடுகின்றது. அதே கோயிலில் பூதலவீரன் உதைய மார்த்தாண்ட வர்மனின் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது.

இக்கோயில் கோபுரத்தின் ஐந்து நிலைகளிலும் தீட்டப்பட்டுள்ள கி. பி. 16-ஆம் நூற்றாண்டு விசய நகரர் காலத்து ஓவியம் அரேபியர்கள் தமிழ்நாட்டுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்ததைச் சுட்டும் வண்ணம் அமைந்துள்ளது.

## 37. திருவாலீஸ்வரம்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் மன்னார் கோயிலிலிருந்து 3 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரில் கடனாநதிக் கரையில் நெல்வயல்களுக்கு நடுவே அமைந்துள்ள சிவன் கோயில் இவ்வூரின் வரலாற்றினை அறிந்து கொள்வதற்கு உதவுகின்றது.

கடனாநதியின் பெயர் 'கடம்' என்ற சமஸ்கிருதச் சொல்லிலிருந்து வந்துள்ளது. கடம் என்றால் 'பானை' அல்லது 'கலசம்' என்று பொருள். இந்நதிநீர் அகஸ்தியர் கையிலிருந்த கலசநீர் என்றும் அகஸ்தியர் இக்கோயிலுக்கு மேற்கேயுள்ள மலையடிவாரத்தில் தங்கியிருந்தார் என்றும் நம்பப்படுகிறது.

இக்கோயில் சோழர் காலக் கட்டடக் கலைப் பாணிக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இக்கோயிலில் சோழர், சோழ பாண்டியர் மற்றும் பிற்காலப் பாண்டியர்களின் கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன. இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள

முதலாம் இராசராசனின் 9-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இவ்வூரை 'முள்ளிநாட்டு ராஜராஜவள நாட்டு பிரம்மதேயம் ராஜராஜ சதுர்வேதிமங்கலம்' எனக் குறிப்பிடுகின்றது. பிரம்மதேசம் திருவாலீஸ்வரம் மற்றும் மன்னார்கோயில் ஆகிய இம்மூன்று ஊர்களும் அருகருகே 2 கி. மீட்டர்களுக்குள்ளே அமைந்துள்ளன. சோழர் காலத்தில் இம்மூன்று ஊர்களும் ஒரே பகுதியாக 'ராஜராஜச் சதுர்வேதிமங்கலம்' என்ற பெயரில் ஒரு பிரம்மதேயமாக விளங்கியுள்ளது. முதலாம் இராசராசன் காலத்திலும் அவனுக்குப் பின்னும் இப்பகுதி ஒரு முக்கிய இராணுவ மையமாக விளங்கியுள்ளது. இவர்கள் காலத்தில் நாகர்கோயிலில் கோட்டாற்றுக்கு அருகில் நிறுத்தியதைப் போன்று பெரும் படையொன்று இப்பகுதியிலும் நிறுத்தப் பட்டிருந்தது. இதற்கு 'மூன்று கை மகாசேனை' என்று பெயர். சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியனின் கல்வெட்டு இக்கோயில் இறைவனைத் 'திருவாலீஸ்வரம் உடைய மகாதேவர்' எனக் குறிப்பிடுகின்றது. ஊரினை 'முள்ளிநாட்டு முடிகொண்ட சோழ வளநாட்டு ராஜராஜப் பாண்டிநாட்டு பிரம்ம தேயம் ராஜராஜ சதுர்வேதிமங்கலம்' எனக் குறிப்பிடுகின்றது. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், சடாவர்மன் குலசேகரபாண்டியன் (பூவின்கிழத்தி) சீவல்லபன் ஆகியோரின் கல்வெட்டுகளும் பொறிக்கப் பட்டுள்ளன. பாண்டியர் கல்வெட்டுகள் இவ்வூரைத் 'திருவாலீஸ்வரம்' என்றும் 'ராஜராஜ சதுர்வேதி மங்கலம்' என்றும் குறிப்பிடுகின்றன.

இங்குள்ள சௌந்தர்யநாயகி அம்மன் கோயிலில் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன. இக்கோயிற் கல்வெட்டுகளிலிருந்து 'திருவாலீஸ்வரம்' என்பது ஊரினையும், கோயிலினையும் குறிப்பிடுவதை அறியலாம்.

இக்கோயில் விமானத்தில் கர்ணகூடு-சாலைப் பகுதிகளில் காணப்படும் சிற்பங்கள் சிறந்த கலை நயத்துடன் வடிக்கப்பட்டுள்ளன.

## 38. தென்காசி

திருநெல்வேலிக்கு மேற்கே 50 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூர் தென்காசிப் பாண்டிய மன்னன் பராக்கிரமபாண்டியனால் (கி.பி. 1422-1463) உருவாக்கப்பட்டதாகும்.

இறைவன் தனது கனவில் தோன்றிய வடகாசி யில் உள்ள ஆலயம் பழுதடைந்து விட்டதால், தென் காசியில் ஒரு கோயில் எழுப்ப வேண்டுமென்று கேட்டுக்கொண்டதாகவும், அதன்படி தென்காசியில் காசிவிசுவநாதர் ஆலயத்தினை எழுப்பியதாகவும் இவனது கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்படுகிறது.

இக்கோயிலில் உள்ள தூண் மண்டபம் அழகிய சிற்பங்களைத் தாங்கி நிற்கிறது. வீரபத்திரன், காளி, ஊர்த்துவதாண்டவர் ஆகிய சிற்பங்கள் மிகப் பொலிவுடன் வடிக்கப்பட்டுள்ளன.

இக்கோயிலில் 9 நிலைக்கோபுரப் பணியினைத் தொடங்கிய பராக்கிரம பாண்டியன், கற்பணி முடியும் தருவாயில் இறந்து விடுகிறான். அவனது தம்பி யாகிய சடாவர்மன் குலசேகரபாண்டியனால் (கி.பி. 1430-1473) மீதி உள்ள 8 நிலைச் சுதைப்பகுதி முடித்துப் திருப்பணி நடத்தி வைக்கப்பட்டுள்ளது.

கோபுர வாயிலில் அமைந்துள்ள பராக்கிரம பாண்டியனின் பாடற் கல்வெட்டுகள் புகழ் பெற்றவை யாகும். கல்வெட்டுகளில் இவ்வூர் 'தட்சிணகாசி'

என்றும் இறைவன் 'விசுவநாதர்' என்றும் 'குலசேகர நாதர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இறைவி 'உலக முழுதுடைய நாச்சியார்' என்றும் 'குழல்வாய் மொழி அம்மை நாச்சியார்' என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.

**பாடல் கல்வெட்டு 1**

ஆராயிலுமிந்தத் தென்காசி மேவு
பொன்னாலயத்து வராததோர் குற்றம்
வந்தாலங்கு வந்ததனை நேராகவே யொழித்துப்
புரப்பார்கள் நீதியுடன்
பாரறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே.

**பாடல் கல்வெட்டு 2**

விண்ணாடர் போற்றும் தென்காசி மீதினியினில் எங்களண்ணாழ்வி செய்த பணி இப்படி குறையாய்க் கிடக்க வொண்ணாமல் . . . . .

## 39. தென்மலை

சங்கரன்கோவில் வட்டத்தில், சங்கரன்கோவில்-சிவகிரி சாலையில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் எடுப்பிக்கப் பட்ட திரிபுராந்தீசுவரர் என்றழைக்கப்படும் சிவன் கோயில் ஒன்றுள்ளது. இக்கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் ஆகிய மன்னர்களுடைய கல்வெட்டுகள் உள்ளன. இவற்றுள் பழமையானது முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டி யனின் கல்வெட்டாகும். எனவே அம்மன்னன் காலத்தில் இக்கோவில் எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். கல்வெட்டுகள் இக்கோயில் இறைவனை 'திருப்பாத்தீசுவரமுடைய நாயனார்' என்றும்

இறைவியை 'சிவனமுதுடையாட்டி நாச்சியார்' என்றும் குறிப்பிடுகின்றது.

வீரபாண்டியன் காலத்தில் அம்மன் கோயில் எழுப்பப்பட்டிருக்க வேண்டும். இம்மன்னனின் கல்வெட்டு திருவானைக்கா உடையான் திவாகரன் என்பவன் அம்மன் கோயிலை எழுப்பியதாகக் குறிப்பிடுகின்றது.

தென்மலையில் ஆதிதிராவிடர் குடியிருப்புக் கருகில் நடுகல் ஒன்றுள்ளது. இதில் பாயும் புலியின் உருவமும், அதனைக் கொண்டையுடன் உள்ள ஈட்டியால் குத்தும் வீரனின் உருவமும் புடைச் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. வீரனருகில் அவன் பெயர் சுட்டும் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

''பொம்மய நா
யக்கர் அடை
க்கலம்
காத்தா
ன்''

இவ்வூரின் மலையடிவாரத்தில் தண்ணீர் ஓடி வருகின்ற மண்ணரிப்பின் பக்கத்தில் நுண்கற்காலக் கருவிகள் காணப்படுகின்றன. இக்கருவிகள் கிடைக்கின்ற மேட்டுப் பகுதியில் பெருங்கற்காலத்து முதுமக்கள் தாழிகளும், கருப்பு-சிவப்பு பானை ஓடுகளும் காணப்படுகின்றன.

மேலும் இவ்வூரில் ஆணும் பெண்ணும் இணைந்துள்ள பல சதிக்கற்கள் காணப்படுகின்றன. இச்சதிக்கற்கள் கி.பி. 16-17 ஆம் நூற்றாண்டில் இப்பகுதியில் சதி வழக்கம் அதிகமாக இருந்தமையை எடுத்துக் காட்டுவதாக விளங்குகின்றன,

## 40. தென்திரிபுவனம்

தென்திரிபுவனம், அம்பாசமுத்திரம் வட்டத்தில் வீரவநல்லூரிலிருந்து 3கி.மீ. தொலைவில் தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள அழகிய சிற்றூராகும். இவ்வூரின் பழமைக்குச் சான்றாக இவ்வூர்ச் சிவன் கோயில் விளங்குகின்றது. தன்பொருநைப் பேராற்றங் கரையில் அமைந்துள்ள இக்கோயிலில் பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டுகளின் பழமையானது சடைய வர்மன் ஸ்ரீவல்லபனுடைய (கி.பி. 1090 - 1116) கல்வெட்டாகும். எனவே இம்மன்னன் காலத்தில் இக்கோயில் எழுப்பப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது. இங்கு திருவிதாங்கூர் மன்னருடைய கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டுகளில் இவ்வூர் தென்திருபுவனம்' என்றும் 'சுந்தரபாண்டிய நல்லூர்' என்றும் குறிப்பிடப் படுகின்றது. இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் பெயரினைத் 'தென்நீர்வண்ணமுடைய மகா தேவர்' என்றும் 'தென்திருபுவனமுடையார்' என்றும் இருவிதமாகக் கூறுகின்றன. இக்கோயில் அழகிய கட்டடக்கலை அமைப்புடனும், எழிலார்ந்த கோட்டச் சிற்பங்களுடனும் பார்ப்போர் வியக்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. இறைவன் கோயிலை அடுத்துத் தென்புறத்தில் இறைவி கோயில் அமைக்கப் பட்டுள்ளது. கோயில் கல்வெட்டுகளில் இறைவியின் பெயர் 'திருப்பூவின் தேவிநாச்சியார்' என்று குறிப் பிடப்படுகின்றது.

இக்கோயிலின் திருவிதாங்கூர் மன்னன் தான் பிறந்த பரணி நட்சத்திரத்தில் தென்திருபுவனமுடைய நாயனார்க்கு விழா நடத்துவதற்காக நிலம் தானமாக

வழங்கியுள்ளான். இச்செய்தியினை இக்கோயிலில் உள்ள இம்மன்னனது கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகின்றது.

## 41. நம்பித்தலைவன் பட்டயம்

நான்குநேரி வட்டத்தில் ஏர்வாடியிலிருந்து திருக்குறுங்குடி செல்லும் சாலையில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரின் அருகில் 'மயிலாடு பாறை' எனும் பெயரில் பாறை ஒன்றுள்ளது. இப்பாறையின் மீது சிவன் கோயில் ஒன்றுள்ளது. இக்கோயிலின் தென்புற அர்த்த மண்டபச் சுவரில் மாறஞ்சடையனின் (முதலாம் வரகுணன்) 44-ஆவது ஆட்சியாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு இவ்வூர் இருக்கும் நாட்டினை 'வைகுந்த வளநாடு' என்றும் மயிலாடுபாறைக் கோயிலில் வீற்றிருக்கும் இறைவனை 'மயிலாடு பாறை மகாதேவர்' என்றும் குறிப்பிடுகின்றது. மேலும் தளபதி சமுத்திரம் சிவன் கோயிற் கல்வெட்டும் 'மயிலாடுபாறை மகாதேவர் என்று குறிப்பிடுகிறது. இவ்விறைவனுக்கு எட்டி குஞ்சான் என்பவன் நொந்தாவிளக்கு எரிக்க ஆடு வழங்கிய செய்தியினைக் குறிப்பிடுகின்றது. இவ்வாடு கொண்டு நாராய நாழியால் உரி நெய் அளந்து தருதல் வேண்டும் என்று இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்கோயிலின் வட்புற அர்த்த மண்டபச் சுவரில் இரண்டு சோழர் காலத்திய வட்டெழுத்துக் கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்விரு கல்வெட்டுகளும் கோப்பர கேசரிவர்மன் எனத் தொடங்குகின்றன. இம்மன்னனின் 20-ஆவது ஆட்சியாண்டினை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

மற்றொரு கல்வெட்டில் ஆட்சியாண்டுப் பகுதி சிதைந்துள்ளது. இவ்விரு கல்வெட்டுகளும் இக்கோயிலில் நொந்தா விளக்கு எரிப்பதற்காக ஆடுகள் தானமாக வழங்கப்பட்ட செய்தியினைத் தெரிவிக்கின்றது. திருக்குறுங்குடி கோன் இரவி என்பான் இத்தானத்திற்குப் பொறுப்பாளனாக இருந்திருக்கிறான் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### மயிலாடுபாறை மாறஞ்சடையனின் வட்டெழுத்துக் கல்வெட்டு

1. ஸவத்திஸ்ரீ கோமாறஞ் சடை
2. யற்கு யாண்டு நாற்பத்துமுன்
3. று இதனெதிராண்டு வைகுந்த வள [நா]
4. ட்டு திரு மயிலாடுபாறை எம்பெ
5. ருமானுக்கு தென் (நா)ட்டு செங்கோ
6. டி எட்டிகுஞ்சான் வைச்ச தி
7. ரு நொந்தா விளக்கு ஒன்று இதனுக்
8. கு நிசதி உரிய் நெய் நாராய நாழி
9. [யா]ல் அட்டுவதாக அடுத்த சாவா மூவா (ப்)
10. பேராடு நூறு இவ்வாடு திருக்கு
11. றுங்குடி படைத்தலைவர்க்கு
12. மானுலகனுக்குள் ஆதிச்சக்
13. கொற்றனுக்கும் அடுத்தான் இந்
14. நெய் அட்டுவிப்பதனுக்கும்
15. இவ்வாடு நூற்றுக்கும் இறைப்பு
16. ணைப்பட்டேன் திருக்குறுங்கு
17. டி கோன் இரவியேன்

## 42. நெற்கட்டாஞ்செவல் (ஆவுடையார்புரம்)

சிவகிரி வட்டத்தில் சங்கரன்கோயிலுக்கு வடமேற்கே 7 மைல் தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. மறவர் பாளையங்கள் பதினெட்டுள் நெற்கட்டாஞ்செவல் ஒரு பாளையமாகும். இப்பாளையத்தில் வம்ச வரலாறு வரகுண சிந்தாமணி பாண்டிய காலத்திலிருந்தே தொடங்குகிறது.

மதுரையை அடுத்துள்ள நாகமலையில் உள்ள குகை ஒன்றில் புலி ஒன்று இருந்து கொண்டு ஊர் மக்களுக்குத் தொல்லை கொடுத்து வந்தது. அப்புலியின் தொல்லை குறித்து ஊர் மக்கள் மன்னனிடம் தெரிவித்தனர். அது அறிந்த மன்னன் வரகுண சிந்தாமணி பாண்டியன் வீரர் பலரை அழைத்துக் கொண்டு புலிக்குகையை அடைந்தார். வீரர்கள் புலியைக் கொல்லக் குகையினுள் சென்று திரும்பி வரவில்லை. சிந்தாமணி பாண்டியன் ஆவுடையார்புரம் சமீனை அழைத்துக் குகையினுள் சென்று புலியைக் கொல்ல ஆணையிடுகிறார். அதன்படியே ஆயுதங்களுடன் சென்று புலியைக் கொன்று வெற்றியுடன் திரும்புகிறார். அவரது வீரத்தைப் பாராட்டி அவருக்குப் பல வெகுமதிகள் அளித்து வரகுண சிந்தாமணி புலித்தேவன் என்ற பட்டத்தையும் சூட்டுகிறார். அதுமுதற் கொண்டு ஆவுடையார்புரம் (நெற்கட்டாஞ்செவல்) சமீன்தார் ஒவ்வொருவருக்கும் "புலிதேவன்" எனும் பட்டப்பெயர் சேர்லாயிற்று. மதுரை நாயக்கர் ஆட்சியை ஏற்று இவர்கள் நடந்து வந்துள்ளார்கள்.

வரகுணசிந்தாமணி புலிதேவன் தொடங்கி 10-ஆவதாக சமீன் பொறுப்பை ஏற்றவர் 'காத்தப்ப புலிதேவன்" ஆவான். இவனது வீரமே நெற்கட்டாஞ்

செவல் புகழ் தமிழகம் முழுவதும் பரவ வழிவகை செய்து தந்துள்ளது எனலாம். சாந்தப்ப புலித்தேவர் சித்திரபுத்திர தேவருக்கும், சிவஞான நாச்சியாருக்கும் 1714-ல் மகனாகப் பிறந்தார். இவர் இலட்சுமி நாச்சியார் என்பவரை மணந்து கொண்டார். புலித் தேவருக்கு இரண்டு ஆண்பிள்ளைகளும் ஒரு பெண் பிள்ளையும் உண்டு. ஆண் பிள்ளைகள் சிவஞான பாண்டியன், சித்திரபுத்திரதேவர் ஆவர், பெண் மகவு கோமதி முத்துத்தலச்சி ஆவார்.

புலித்தேவர் தன்னைக் காத்துக் கொள்ளவும் தனது நண்பர்களைக் காக்கவும் பல போர்களை வெற்றிகரமாகச் செய்தான்.

1. கி.பி. 1755-ல் கர்னல் ஹெரான் மதுரை, இராமநாதபுரம் கோவில்குடி ஆகிய வெற்றிகரமான படையெடுப்புகளுக்குப் பின் திருச்சி திரும்பி வரும் பொழுது புலித்தேவனிடம் தோல்வியைத் தழுவினார்.

2. கி.பி. 1759-ல் வாசுதேவநல்லூர்க் கோட்டையினை யூசுப்கான் தாக்கிய பொழுது புலித்தேவன் சமயோசிதமாகப் போரிட்டு யூசுப்கான் படையினை ஓட ஓட விரட்டித் தாக்கினான்.

3. கி.பி. 1760-ல் கான்சாகிபு நெற்கட்டாஞ் செவலைத் தாக்க பீரங்கிகளை அமைத்ததை அறிந்த புலித்தேவன் தனது படைவீரர்களுடன் சென்று கான்சாகிபு முகாமினைத் தாக்கி தோல்வியடையச் செய்தான்.

4. களக்காட்டுக் கோட்டையினை மாபூஸ்கான் தாக்கிய போது புலித்தேவன் திருவாங்கூர்ப் படைகளுடன் அதனை எதிர்த்து மாபூஸ்க்கானைத் தோல்வியடையச் செய்தான்.

5. மாபூஸ்கானின் தம்பி ரகீம் வசம் இருந்த ஸ்ரீவில்லிப்புத்தூர்க் கோட்டையினைப் புலித்தேவன் கைப்பற்றினான்.

6. புலித்தேவன் தனது நண்பனும், தலைவன் கோட்டையின் பாளையக்காரனுமான ஈஸ்வரத் தேவனுக்காக கி.பி. 1756-ல் யூசுப்கானுடன் போரிட்டு வெற்றி கண்டான்.

7. கி.பி. 1767 மேத் திங்கள் 13ல் மீண்டும் வாசுதேவநல்லூர்க் கோட்டையின் மீது டொனால்டு காம்பல் தலைமையிலான படைதாக்கியது. இதில் இறுதி வரை போராடிய புலித்தேவன், தோற்கும் சமயத்தில் தன் ஆட்களுடன் தலைமறைவாகி விட்டான்.

புலித்தேவன் தெய்வ பக்தி மிக்கவன். பல் அறக்கொடைகள் வழங்கியுள்ளான். நெற்கட்டாஞ் செவலில் காத்தவிநாயகர் கோயில், உள்ளம் உடையார் கோயில் ஆகிய கோயில்களை எழுப்பி னான். திருநெல்வேலியில் புலியூர் அக்ரகாரத்தை ஏற்படுத்தினான். திருநெல்வேலி டவுனில் உள்ள வாகையடி அம்மன் கோயிலைக் கட்டியவன் இவனே. அக்கோயிலுக்காக நிலத்தானமும் வழங்கியுள்ளான். சீவலப்சேரியில் ‘புலித்தேவன் மண்டபம்’ என அழைக்கப் பெறும் மண்டபம் இவனால் எடுப்பிக்கப் பட்டதே. அழகிய தேர் ஒன்றினை உருவாக்கி அதனைக் கரிவலம் வந்த நல்லூர்க் கோயிலுக்கு வழங்கியுள்ளான். அக்கோயிலில் முன்மண்டபமும் இவனால் எடுப்பிக்கப்பட்டதாகும். அம்மண்டபத்தூண் ஒன்றில் புலித்தேவன் உருவம் புடைச்சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது.

நெற்கட்டாஞ்செவல் ஊர் கோட்டை மதிலுக்கு உட்புறம் அமைந்துள்ளது. ஊருக்குள் நுழையும் பொழுதே ஒரு கோட்டைக்குள் நுழைவது போன்ற உணர்வு ஏற்படும். தற்போதும் கோட்டை மதிலின் அடிப்பகுதி ஆங்காங்கே தெரிகிறது. மேலும் குண்டுகள், பீரங்கிகள் இப்பகுதியில் கண்டெடுக்கப் பட்டுள்ளன. அவை இப்பகுதியில் சண்டை நடை பெற்றதற்குச் சான்றாகத் திகழ்கின்றன. அப்பொருட் களும் புலித்தேவனின் வேல்கம்பும் தற்பொழுது மதுரை திருமலை நாயக்கர் அரண்மனைத் தொல் பொருள் ஆய்வுத்துறை அருங்காட்சியகத்தில் காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டுள்ளன. இவ்வூரின் நடுப் பகுதியில் அரண்மனை உள்ளது. அரண்மனையை நடுநாயகமாக வைத்தே தெருக்களும் வீடுகளும் உருவாக்கப்பட்டுள்ளன. இவ்வரண்மனை புலித்தேவன் காலத்திற்குப் பின்பு எழுப்பப்பட்டிருக்க வேண்டும். புலித்தேவனின் பிற கோட்டைகளாகக் கருதப்படும் வாசுதேவநல்லூர்க் கோட்டையும், புதுக்கோட்டையும் இன்று கோட்டை மேடுகளாகக் காட்சியளிக்கின்றன.

## 43. பன்பொழி

இவ்வூர் தென்காசி வட்டத்தில் தென்காசிக்கு வடமேற்கே 11 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

இவ்வூரில் 'நகரீஸ்வரமுடையார்' எனும் பிற்காலப் பாண்டியர் கோயில் உள்ளது. இக்கோயிலில் சடாவர்மன் வீரபாண்டியன், அபிராம பராக்கிரம பாண்டியனின் மகனான ஜடிலவர்மன் பெருமாள் பராக்கிரம பாண்டியன், ஜடிலவர்மன் சீவல்லபனின் 10-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1544) ஜடிலவர்மன் அழகன் பெருமாள் பராக்கிரம

பாண்டியனின் 30-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1545) ஆகியன பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் இவ்வூர் "பன்பொழி" என்றும் "பைம்பொழில்" என்றும் இறைவன் "நகரீஸ்வரமுடையார்" என்றும் "நகரீச்சுரமுடைய நாயனார்" என்றும் குறிப்பிடப்படுகின்றன. சடாவர்மன் வீர பாண்டியன் காலத்தில் இக்கோயில் எழுப்பப் பட்டிருக்கலாம். பின் தென்காசிப் பாண்டியர்களால் விரிவடைந்துள்ளது. 13-ஆம் நூற்றாண்டிலேயே இவ்வூர் சிறப்புற்று விளங்கியமையினை சடாவர்மன் வீரபாண்டியனின் கல்வெட்டு நமக்கு உணர்த்து கின்றது.

## 44. பத்தமடை

அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பாசமுத்திரத் திற்குக் கிழக்கே சுமார் 13 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. பத்தமடை என்றாலே நமக்குப் "பாய்" தான் நினைவிற்கு வரும். பத்தமடைப்பாய் அந்த அளவுக்குப் பெயர்பெற்றது. இவ்வூர் சுவாமி சிவானந்த சுவாமிகள் பிறந்த இடமாகும். இவ்வூரின் வரலாற்றினை அறிவதற்கு இவ்வூரில் அமையப் பெற்றுள்ள கரியமாணிக்கப் பெருமாள் கோயில் மற்றும் பிலவநாதர் சிவன் கோயில் ஆகியன துணை புரிகின்றன. பிற்காலப் பாண்டியர் காலத்தில் இவ்வூர் சிறப்புற்று விளங்கியுள்ளது.

கரியமாணிக்கப் பெருமாள் கோயிலில் சடாவர்மன் குலசேகர பாண்டியனின் (பூதலமடந்தை) 3-ஆவது மற்றும் 8-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளும், மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் (திருமகள், ஜெயமகள்) 13ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும்

பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "பத்தமடை" என்றும், இறைவன் "ஆயிரத்தென்ம விண்ணகராழ்வார்" என்றும் குறிப்பிடப்படுகின்றன. பில்வநாதர் சிவன் கோயிலில் சடாவர்மன் குலசேகர பாண்டியனின் (பூவின் கிழத்தி) 12-ஆவது மற்றும் 13-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன இக்கல்வெட்டுகள் இவ்வூரைப் பத்தமடை என்றும் இறைவனை "சீவல்லவஈஸ்வரமுடையார்" என்றும் "சீவல்லவயீச்சுரமுடைய நாயனார்" என்றும், "சீவல்லவயீஸ்வரமுடைய பரமசுவாமி" என்றும் குறிப்பிடுகின்றன. இக்கோயிலின் ஒரு கல்வெட்டு கரியமாணிக்கப் பெருமாள் கோயில் இறைவியை "ஆயிரத்தென்ம திருப்பள்ளியறை நாச்சியார்" என்று குறிப்பிடுகின்றது. பிற்காலப் பாண்டியர் காலத்தில் வழங்கப்பட்ட 'பத்தமடை' எனும் பெயரே இன்றும் மாறாமல் வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

## 45. பழைய குற்றாலம்

குற்றாலத்திலிருந்து அம்பாசமுத்திரம் செல்லும் சாலையில் 5 கி.மீ. தொலைவில் பழைய குற்றாலம் செல்லும் பாதை பிரிகிறது. இப்பாதையின் தொடக்கத்தில் "அழுதகன்னிஆறு" எனும் சிற்றாறு ஓடுகிறது. இவ்வாற்றின் இரு கரைகளிலும் நுண்கற்காலக் கருவிகள், இக்கருவிகள் செய்யப் பயன்படுத்தப்பட்ட மூலக்கற்கள். பெருங்கற்காலத்தைச் சார்ந்த கற்கிடைகள் (Cairn circle) கருப்பு-சிவப்பு வண்ணப் பானை ஓடுகள் ஆகியன காணக்கிடைக் கின்றன. இங்கு கிடைக்கும் நுண்கற்கருவிகள் சாயர்புரத்தில் கிடைக்கும் நுண்கற்கருவிகளை ஒத்ததாகக் காணப்படுகின்றன. இவற்றைக்

கொண்டு இப்பகுதியின் தொன்மை வரலாறு கி.மு. 4000 லிருந்து தொடங்கியுள்ளமையினை அறியலாம்.

## 46. பாட்டக்குறிச்சி

தென்காசியிலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவில் பாட்டக்குறிச்சி எனும் சிறிய கிராமம் உள்ளது. தென்காசியிலிருந்து இவ்வூருக்குச் செல்லும் சாலையில் வடபுறத்தில் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. இத்தாழிகள் ஆங்காங்கே சிதைந்த நிலையிலும், சில இடங்களில் முழுமையான தாகவும் ஆனால் வாய்ப்பகுதி மட்டும் தெரியும் நிலையிலும் காணப்படுகின்றன. இப்பெருங்கற்கால மக்களின் பண்பாடு பிற இடங்களில் காணப்படும் பண்பாடுகளிலிருந்து சற்று மாறுபட்டதாகக் காணப் படுகின்றது. பொதுவாக இறந்தவர்களுக்காக வைக்கப்படும் படையல்கள் சிறு சிறு கலயங்களில் தாழியினுள் வைத்துப் புதைப்பது வழக்கம். ஆனால் இப்பகுதியில் படையல்களைத் தாங்கும் சிறு கலயங் களைத் தாழியின் வெளிப்புறத்திலேயே தாழி யினைச் சுற்றி வைத்துப் புதைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருந்தனர். தாழியினைத் தொட்டி போன்று அமைப்புடைய மூடியினைக் கொண்டு மூடியுள்ளனர். இவற்றோடு கருப்பு-சிவப்பு வண்ணப் பானை ஓடுகளும் காணப்படுகின்றன.

தென்காசி - பாட்டக்குறிச்சி சாலையில் தென்புறம் கிருஷ்ணன் கோயில் ஒன்று காணப்படுகின்றது. இதில் கல்வெட்டுகள் ஏதும் பொறிக்கப்படவில்லை. கட்டடக்கலை அமைப்பினைக் கொண்டு நோக்கின் இக்கோயில் தென்காசிப்பாண்டியர் காலத்தில் கட்டப் பட்டிருக்க வேண்டும்.

## 47. பாபநாசம்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் அம்பா சமுத்திரத்திற்கு மேற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

இத்தலம் அகத்திய முனிவருக்கு சிவபெருமான் திருமணக்கோலத்தில் காட்சி கொடுத்த தலமாகக் கூறப்படுகிறது. இங்கு முக்காளலிங்கர் சிவன் கோயில் தாமிரபரணி நதிக்கரையில் உள்ளது. இக்கோயிலில் உள்ள சிறு மண்டபத்தில் இறைவனும் இறைவியும் ரிஷபாரூடராய்த் திருமணகோலத்தில் அகத்தியருக்குக் காட்சி கொடுக்கும் நிலையில் அழகாக வடிக்கப்பட்டுள்ளது. இத்தலத்தில் சித்திரை விஷு தான் சிறப்பான நாளாகும். அன்றைய தினம் தான் இறைவன் அகத்தியருக்கு திருமணக் கோலம் காட்டியதாக நம்பப்படுகிறது. இக்கோயிலுக்கு வந்து தாமிரபரணி நதியில் நீராடினால் நமது பாவங்களெல்லாம் நீங்கிவிடும் என்பது ஐதீகம், இக்காரணத்தினால்தான் 'பாபநாசம்' எனப்பெயர் பெற்றுள்ளது. இக்கோயில் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் எழுப்பப்பட்டிருக்கலாம்.

இக்கோயிலிலிருந்து மலைமேல் ஏறிச்சென்றால் பாபநாசம் அணைக்கட்டைப் பார்க்கலாம். அணைக் கட்டினைப் பார்த்துத் திரும்பும் வழியில் அகத்திய ருக்கும், முருகனுக்கும் சிறு கோயில்கள் எழுப்பப்பட் டிருப்பதைக் காணலாம். இக்கோயில்களுக்கு அருகி லேயே குளிப்பதற்கு வசதியாக "அகத்தியர் அருவி" அமையப்பெற்றுள்ளது. இங்கிருந்து நாலு கல் தொலைவு மலை மீதேறிச்சென்றால் பிரமாண்டமான கல்யாணி தீர்த்த அருவியினைக் காணலாம்.

## 48. பாப்பான்குளம்

அம்பாசமுத்திரம் வட்டத்தில், அம்பாசமுத்திரத்திற்கு வடக்கே அமைந்துள்ளது இவ்வூரில் இராமசாமி கோயில் மற்றும் சித்தஞானேஸ்வரர் கோயில் ஆகிய இரு கோயில்கள் அமைந்துள்ளன.

இராமசாமி கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1216-1244) 23-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூர் முள்ளிநாட்டு ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து வடமேல் பிடாகை "வேளாளர் குறிச்சி" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இறைவன் "பகவதி விண்ணகராழ்வார்" எனக் குறிப்பிடப் பட்டுள்ளார்.

சித்தஞானேஸ்வரர் கோயிலில் குலசேகர மாற வர்மன் கல்வெட்டுகள் பாண்டியனின் (கி.பி. 1260-1311) 8-ஆவது ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்டுள்ளன. இக்கல்வெட்டுகள் இவ்வூர் "கற்குறிச்சி எனவும் இறைவன் உடையார் கருத்தரித்து முடிந்த பாண்டி ஈச்சுரமுடைய நாயனார்" எனவும் குறிப்பிடப் படுகின்றார். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திற்குப் பின் இவ்வூர் பெயர் மாற்றம் அடைந் திருப்பதை அறியலாம்.

## 49. பாலாமடை

இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து 15 கி.மீ. தொலைவில் தண்பொருநைப் பேராற்றங்கரையில் அமைந்துள்ளது. இவ்வூரின் தொன்மைச் சான்றாக ஒரே ஒரு சிவன் கோயில் மட்டும் உள்ளது. இறை வனை 'சிவக்கொழுந்தீஸ்வரர்' என்றும் இறைவியை




'மங்களநாயகி அம்பாள்' என்றும் அழைக்கின்றனர். இக்கோயில் பிற்காலத்தைச் சார்ந்த கட்டடக்கலை அமைப்பில் வடிக்கப்பட்டுள்ளது. இருப்பினும் இங்கு கொல்லம் 728-ஆம் ஆண்டைச் (கி.பி. 1552) சார்ந்த கல்வெட்டு ஒன்று உள்ளது. இதில் இவ்வூரின் பெயர் 'பாலாமடை' என்று குறிப்பிடப்படுகின்றது.

## 50. பாளையங்கோட்டை

திருநெல்வேலிக்குக் கிழக்கே 4 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரைச்சுற்றிப் பெரிய கோட்டை ஒன்றிருந்ததால் "பாளையங்கோட்டை" எனப் பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. இங்கு இராமசாமி கோயில், திரிபுராந்தீஸ்வரர் கோயில், கோபால்நாத சுவாமி, கோயில் ஆகியன அமைந்துள்ளன. இவற்றுள் கோபாலநாதசுவாமி கோயில் பழமையானதாகும். இக்கோயிலில் முதலாம் இராசராசனின் வட்டெழுத்துக் கல்வெட்டுகள், உதய மார்த்தாண்டன் மற்றும் நாயக்கர் காலக் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "ஸ்ரீவல்லப மங்கலம்" எனக் குறிப்பிடப்படுகின்றது. இக்கோயிலின் மேற்குப் புறத் திருச்சுற்றிலுள்ள தூண்களில் இராசராசன் காலத்தில் வடிக்கப்பட்ட பல சிறிய சிற்பங்கள் காணப் படுகின்றன அவற்றுள் அனுமன் சீதையிடம் கணை யாழியினைக் கொடுத்துப் பணிந்து நிற்பது போன்ற சிற்பம் ஒன்றும் இடம் பெற்றுள்ளது. இச்சிற்பத்தின் கீழே பொறிக்கப்பட்டுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டு சுவையான செய்தியினைத் தெரிவிக்கின்றது. "ஸ்வஸ்திஸ்ரீ வாம அணுத்தி அடிகணம்பி இடுவிச்சிது இத்தூணின் திருநாமம் ஸ்ரீஅனுமன்" என்று இக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. அனுமனுக்குச் சிறப்புச் செய்யும் பொருட்டு இத்தூணுக்கே 'அனுமன்' எனப் பெயரிட்டுள்ளனர்.

கோபாலநாதசுவாமி கோயிலுக்குச் சென்று வழி படுவோருக்கு ஆண்குழந்தை பிறக்கும் என்பது ஐதீகம். இக்கோயிலில் பூசை செய்து வந்த குருக்கள் ஒருவர் தனக்கு ஆண் குழந்தை பிறக்காததால் ஆத்திர மடைந்து தன் கையிலிருந்த பூசைப் பாத்திரம் ஒன்றினை சுவாமி சிலையை நோக்கி வீசியதாகவும் அதனால் சுவாமியின் மூக்கு உடைபட்டதென்றும் கூறுவார்கள். இப்போதும் சுவாமியின் மூக்கில் ஒரு வெட்டு இருப்பதைக் காணலாம்.

## 51. பிரம்மதேசம்

பிரம்மதேசம் அம்பாசமுத்திரத்திற்கு வடக்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் வரலாற்றினை ஓரளவு அறிந்து கொள்வதற்கு இங்கு அமையப்பெற்றுள்ள கைலாசநாதர் சிவன் கோயில் துணை புரிகிறது.

கைலாசநாதர் கோயில் சோழர் காலத்தில் முதன் முதலாக எழுப்பப்பட்டிருக்கலாம், இவ்வூரில் தாமிர பரணி ஆற்றுப் படித்துறையொன்றில் முதலாம் இராச ராசனின் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப் பட்டுள்ளது. இக்கல்வெட்டிலிருந்து இக்கோயில் முதன் முதலில் இருந்த அமைப்பு குறித்து ஏதும் அறிய இயலவில்லை. ஆனால் இக்கோயிலில் தற்போதைய அமைப்பு கி. பி. 15-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி யினைச் சார்ந்தது என்பதை உணர்த்துகின்றது. இக்கோயிலில் கைலாசநாதர் சன்னதிக்கு முன்பாக எழுப்பப்பட்டுள்ள ஏழு நிலைக் கோபுரம் வீரப்ப நாயக்கனால் (கி.பி. 1572-1595) எழுப்பப்பட்டுள்ளது. இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள பூதலவீர உதைய மார்த்தாண்டன் (கி. பி. 1515) கல்வெட்டில் இவ்வூர் "முள்ளிநாட்டு ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து

பிரம்மதேசம்'' என்றும் இறைவன் "கைலாயமுடைய நாயனார்'' என்றும் குறிப்பிடப்படுகின்றன. இதே கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள விசயநகர வேந்தரான வீரபிரதாப சதாசிவதேவ மகாராயர் (கி.பி. 1550) கல்வெட்டில் இவ்வூர் "முள்ளிநாட்டு ராஜராஜச் சதுர்வேதி மங்கலம்'' என்றும் இறைவன் "கைலாச முடைய நாயனார்'' என்றும் குறிப்பிடப்படுகின்றது.

## 52. புலியூர்

இவ்வூர் தென்காசி வட்டத்தில் உள்ளது. இவ்வூரில் தென்காசிப் பாண்டியர்களால் எடுப்பிக்கப் பெற்ற சிதம்பரேஸ்வரர் சிவன் கோயிலும், கிருஷ்ண சுவாமி கோயிலும் உள்ளன.

சிவன் கோயிலில் அபிராமபராக்கிரம பாண்டி யனின் மகனான ஜடிலவர்மன் குலசேகரன் எனும் பராக்கிரமபாண்டியனின் 4-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் (கி.பி. 1547), ஜடிலவர்மன் அழகன் பெருமாள் அதிவீரராமன் எனும் சீவல்லபனின் 42-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் (கி.பி. 1694) பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் 'தென் ஆரிநாட்டுப் புலியூர் எனும் வீரபாண்டியச் சதுர்வேதிமங்கலம்' என்றும் "புலியூர்'' என்றும் குறிப்பிடப்படுகிறது. இறைவன் சிதம்பரேசுவரர் எனக் குறிப்பிடப்படுகிறார்.

கிருஷ்ணசுவாமி கோயிலில் ஜடிலவர்மன் பராக்கிரமபாண்டியனின் 5-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் (கி. பி. 1280), அபிராமபராக்கிரம பாண்டியனின் மகளான ஜடிலவர்மன் குலசேகரன் எனும் திருநெல்வேலிப் பெருமாளின் 8-ஆவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டும் (கி.பி. 1558) பொறிக்கப்

பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் 'தென் ஆரிநாட்டுப் புலியூர் எனும் பராக்கிரமபாண்டியச் சதுர் வேதி மங்கலம்' என்றும் இறைவன் 'ஸ்ரீகிருஷ்ணன் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

தென்காசிப் பாண்டியர் காலத்தில் இவ்வூர்ப் பெயர் முதலில் புலியூர் எனும் பராக்கிரமபாண்டியச் சதுர்வேதி மங்கலமாக இருந்து பின் புலியூர் எனும் வீரபாண்டியச் சதுர்வேதி மங்கலமாக மாறித் தற்பொழுது புலியூர் எனும் பெயரில் மட்டும் வழங்கப் பட்டு வருகிறது.

## 53. பொன்னாக்குடி

பாளையங்கோட்டையிலிருந்து 14 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் 'பாண்டியபுரம்' என்றும் அழைக்கப்படுகிறது. இவ்வூரில் பழமையான சிவன் கோயில் ஒன்றும், பெருமாள் கோயில் ஒன்றும் உள்ளன. கட்டடக்கலையினை நோக்கின் பெருமாள் கோயில் கி.பி.15-ஆம் நூற்றாண்டிலும் சிவன் கோயில் 16-ஆம் கி.பி. நூற்றாண்டிலும் எழுப்பப்பட்டிருக்க வேண்டும். இவ்விரு கோயில்களிலும் கல்வெட்டுகள் ஏதுமில்லை. ஆனால் சிவன் கோயிலின் தென்புறம் அமைந்துள்ள 2-ஆவது வாயிலில் உள்ள கதவுகளில் ஒரு பக்கக் கதவில் உள்ள சிற்பத்தின் மேல்

"சொக்க நாறாயண - தம்மப் பெருமாள்
. . . . . . . . . . . . . . . . சதா சேருவை"

எனப் பொறிக்கப்பட்டுள்ளது. எழுத்தமைதியைக் கொண்டு பார்க்கும் பொழுது இக்கல்வெட்டு கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும் எனத்தெரிகிறது.

## 54. மணப்படைவீடு

இவ்வூர் திருநெல்வேலி வட்டத்தில், திருநெல் வேலிக்கு வடகிழக்கே சுமார் 8 கி மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூர் பிற்காலப் பாண்டியர் மற்றும் சோழர் காலத்தில் சிறப்புற்று விளங்கியமை யினை இவ்வூரில் அமையப்பெற்றுள்ள முத்தீஸ்வர முடையார் கோயில் மற்றும் யானைகாத்தபெருமாள் கோயில் நமக்கு உணர்த்துகின்றன. முதலாம் குலோத்துங்கன், மாறவர்மன் சுந்தரபாண்டியன், எம்மண்டலமும் கொண்டருளிய சடாவர்மன் குலசேகர பாண்டியன் (கி பி. 1190-1217) மற்றும் மாறவர்மன் வீரபாண்டியன் ஆகியோரது கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன கல்வெட்டுகளில் இவ்வூர் "கீழ்க்களக் கூற்றத்து ஸ்ரீவல்லப மங்கலத்து வடகீழ்ப்பிடாகை அம்பலத்தாடி நல்லூர் எனும் மணப்படைவீடு" என்றும், "ராஜராஜபாண்டி நாட்டுக் கீழ்க்களக் கூற்றத்து உத்தமசோழச் சதுர்வேதி மங்கலம் என்றும், "சீவல்லப மங்கலத்து மணப்படைவீடு" என்றும் சோழர் பாண்டியர் காலங்களில் மாறி மாறி வழங்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டுகளில் இறைவன் முன்றீசுவரமுடைய நாயனார் என்றும், மூன்றுகை ஈசுவரமுடைய நாயனார் என்றும் குறிப்பிடப்படு கின்றார்.

யானை காத்த பெருமாள் கோயிலில் 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு பொறிக்கப் பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இறைவன் "காணவினிய விண்ணகர் ஆழ்வார்" எனக் குறிப்பிடப்படுகிறார். இக்கோயிலை எடுப்பித்தவன் "மணப்படைவீட்டு சேயான் தூமாமணியான குலசேகர பன்மன்" என இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

## 55. மருதூர் அணை

இவ்வூர் பாளையங்கோட்டை வட்டத்தில் பாளையங்கோட்டைக்குக் கிழக்கே உள்ளது. இவ்வூரில் சிவன் கோயில், பெருமாள் கோயில், மாடன் கோயில், சாஸ்தா கோயில் போன்றவை உள்ளன. இவை 19-ஆம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்பும் எழுப்பப் பட்டவை. இவற்றில் கல்வெட்டுகள் ஏதுமில்லை. இவ்வூர்ச் சிவன் கோயில் வளாகத்தில் பெருங்கற் காலத்தைச் சேர்ந்த கருப்பு - சிவப்புப் பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவ்வூரில் சிறப்புப் பெற்றது. தாமிரபரணியின் குறுக்கே கட்டப்பட்டுள்ள கல்லணையாகும். இது பார்ப்பதற்கு அழகிய தோற்றமுடையதாக உள்ளது. ஆங்கிலேயர் வருகைக்கு முன் கட்டப் பட்ட அணைகளுள் இதுவும் ஒன்றாகும். அணையின் மேலே பல தமிழ்க் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. அவை அணையில் ஏற்பட்ட உடைப்புப் பற்றியும் சிறு சிறு பழுது நீக்கி வேலைகள் மேற்கொண்டமை பற்றியும் குறிப்புகளைத் தருகின்றன.

தமிழ்க் கல்வெட்டுகளுக்கிடையே ஓர் ஆங்கிலக் கல்வெட்டும் உள்ளது. அது அணை உடைப்பு எடுத்த செய்தியையும் அது அடைக்கப்பட்ட செய்தியினையும் தருகிறது.

**ஆங்கிலக் கல்வெட்டு**

BREACHED
IN DECEMBER 1877
REBUILT
DURING 1878
(100×180)

## 56. மன்னார்கோயில்

இவ்வூர் திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில், அம்பாசமுத்திரத்திற்கு வடமேற்கே 3 கி.மீ. தொலைவில் தாமிரபரணி ஆற்றுக்கும் கடனா நதிக்கும் இடைப்பட்ட பகுதியில் அமைந்துள்ளது. இவ்விரு ஆறுகளும் சோழர் கல்வெட்டுகளில் முறையே முடிகொண்ட சோழப்பேராறு என்றும், இராசராசப் பேராறு என்றும் குறிப்பிடப்படுகின்றது.

இவ்வூரில் அமையப்பெற்றுள்ள கோபாலசாமி பெருமாள் கோயில் இவ்வூரின் வரலாற்றினை எடுத்து இயம்பும் வண்ணம் ஏராளமான கல்வெட்டு களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது. இக் கோயிலில் மூலவர் வேதநாராயணரென்றும், உற்சவர் கோபாலசாமி என்றும் அழைக்கப்படுகிறார். இக் கோயிலில் மொத்தம் 38 கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன. இவற்றுள் சோழர் மற்றும் சோழ பாண்டியர் கல்வெட்டுகள், பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் மற்றும் களக்காட்டுத் திருவடி, குறுநில மன்னர் கல்வெட்டுகள் ஆகியன அடங்கும். இவற்றுள் முதலாம் இராசேந்திர சோழன், சடாவர்மன் சுந்தரசோழபாண்டியன், சடாவர்மன் குலசேகரபாண்டியன் (1190-1217) மற்றும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோரின் கல்வெட்டுகள் குறிப்பிடத்தக்கவை. இக்கோயில் இராசேந்திரசோழன் ஆதிக்கத்தின் கீழ் சேர மன்னன் இராசசிம்மனால் எடுப்பிக்கப்பட்டதென்று இக் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள இராசேந்திர சோழனின் 24-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம் அறியலாம். அவனுக்குப்பிறகு சோழர், சோழ பாண்டியர், பிற்காலப் பாண்டியர் மற்றும் விசயநகர மன்னர்களால் இக்கோயில் விரிவுபடுத்தப்பட்டு ஏராள மான கொடைகளையும் பெற்றுள்ளது.

சோழர் மற்றும் சோழபாண்டியர் கல்வெட்டுகளில் கோயில் 'ராஜராஜப் பாண்டிநாட்டு முடிகொண்ட சோழ விண்ணகர்' என்றும் இறைவன் 'இராசேந்திரசோழ விண்ணகர்த்து நின்றருளிய பரமசுவாமிகள் என்றும் குறிப்பிடப்படுகிறார்.

பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் இவ்வூரும் கோயிலும், முள்ளிநாட்டுப் பிரம்மதேயம் 'ஸ்ரீ இராசராசச் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீ இராசேந்திர விண்ணகர்' என்றும் இறைவன் 'இராசேந்திரசோழ விண்ணகரெம்பெருமாள்' என்றும் குறிப்பிடப்படுகின்றார்.

இதற்குப்பிறகு உள்ள களக்காட்டுக் குறுநில மன்னர் காலக் (கி.பி. 15 நூ. ஆ) கல்வெட்டுகளில் பெருமாள் 'அழகிய மன்னார்' என்று குறிப்பிடப்படுகிறார். இவ்வூர் முள்ளிநாட்டு ராஜராஜசதுர்வேதிமங்கலம் எனக் குறிப்பிடப்படுகிறது.

இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளில் மிகப் பழமையானது சடாவர்மன் சுந்தரசோழபாண்டியனின் 4-ஆவது ஆட்சியாண்டுக் (கி.பி. 1024) கல்வெட்டாகும்.

மூலஸ்தானத்தின் பெருமாள் நின்ற நிலையிலும் இதற்கு மேல் எழுப்பபட்டுள்ள விமானத்தில் ஒன்றன் மேல் ஒன்றாகக் காணப்படும் சன்னதிகளில் பெருமாள் அமர்ந்த மற்றும் கிடந்த நிலைகளிலும் காணப்படுகிறார். கோயிலின் வடபுறத்தில் ஏகாதசி மண்டபத்தின் முன்பாக குலசேகர ஆழ்வார்க்கென்று தனியாக சன்னதி ஒன்று எழுப்பப்பட்டுள்ளது. கல்வெட்டுகளில் குலசேகர ஆழ்வார் 'செண்டலங்கார மாமுனி' எனக் குறிப்பிடப்படுகின்றார். இச்சன்னதி கி. பி. 1209 - ல் சடாவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டுள்ளது.

இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள சுந்தர சோழ பாண்டியனின் கல்வெட்டொன்றினால் மன்னார் கோயிலில் 12 தெருக்கள் (சேரிகள்) இருந்தன வென்றும் அவற்றின் பெயர்கள் முதலாம் இராச ராசனின்பட்டங்கள மற்றும் பரம்பரையினரின் பெயர் களை கொண்டிருந்ததையும் நாம் அறியமுடிகிறது. அவையாவன :

1. ராஜராஜச்சேரி
2. மும்முடிசோழச்சேரி
3. அருமொழிதேவச்சேரி
4. நித்தவிநோதச்சேரி
5. சோழேந்திரசிங்கச்சேரி
6. சுந்தரசோழச்சேரி
7. வானவன்மாதேவிச்சேரி
8. உத்தமசோழச்சேரி
9. செம்பியன்மாதேவிச்சேரி
10. குந்தவைச்சேரி
11. பஞ்சவன்மாதேவிச்சேரி
12. லோகமாதேவிச்சேரி

## 57. மாங்குடி

சங்கரன்கோவிலுக்கு வடக்கே இராசபாளையம் செல்லும் சாலையில் 25-ஆவது கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரில் தேவியாறு எனும் காட்டாறு ஓடுகின்றது. இவ்வாற்றின் கரையில் நுண்கற்காலக்கருவிகள் (Microliths) அரிதாகக் கிடைக்கின்றன. இவ்வாற்றினை ஒட்டிக் "கோட்டை மேடு" என்ற பகுதி உள்ளது. இப்பகுதியில் பெருங் கற்காலத்தினைச் சார்ந்த கருப்பு-சிவப்புப் பானை

ஓடுகள், சீனத்துப்பானை ஓடுகள், கூரை ஓடுகள் மற்றும் செங்கற்கள் ஆகியன காணப்படுகின்றன. இவற்றிலிருந்து இப்பகுதியில் அரண்மனை இருந்ததற்கான சாத்தியக் கூறுகள் அதிமாக உள்ளதனை அறியலாம். இம்மேட்டின் ஒரு பகுதியில் பெரிய நந்தி ஒன்றும் சிதைவுற்ற சிலைகளும் காணப்படுவதிலிருந்து இப்பகுதியில் கோயில் ஒன்று இருந்துள்ளதை அறியலாம். தேவியாற்றின் குறுக்கே இடிந்த கோயில் ஒன்றின் பாகங்களைப் பயன்படுத்தி அறை ஒன்று கட்டப்பட்டுள்ளது. அவற்றில் கி.பி. 13ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியினைக் கொண்ட கல்வெட்டுகளுள் ஒன்றில் "ஆண்மா நாடு" என்ற சொல் காணப்படுகின்றது. எனவே மாங்குடி ஊர் இருந்த பகுதி கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் ஆண்மாநாடு என அழைக்கப்பட்டிருந்ததை அறியலாம்.

## 58. மாறாந்தை

தென்காசி வட்டத்தில் திருநெல்வேலியிலிருந்து 19 கி. மீ. தொலைவில் திருநெல்வேலி-தென்காசி சாலையில் இவ்வூர் அமையப் பெற்றுள்ளது.

இவ்வூரின் தொன்மைக்குச் சான்றாய்த் தற்பொழுது 'கைலாசநாதர்' என்றழைக்கப்படும் சிவன் கோயில் திகழ்கின்றது. முதலாம் பராந்தகன், ஸ்ரீவல்லபன், சடாவர்மன் குலசேகரன், மாறவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் குலசேகரன் ஆகியோரின் கல்வெட்டுகள் இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பழமையானது முதலாம் பராந்தகனின் (கி. பி. 907 - 953) வட்டெழுத்துக் கல்வெட்டாகும். கல்வெட்டுகள் இவ்வூரினை 'மாறன் தாய் நல்லூரான விக்கிரம பாண்டியபுரம்' என்றும் இறைவனை 'ஸ்ரீகைலாச முடைய நாயனார்' என்றும் குறிப்பிடுகின்றன.

இக்கோயில் எடுப்பிக்கப்பட்ட செய்தியினைக் கோயிலில் உள்ள ஸ்ரீவல்லப மன்னனின் 7-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று குறிப்பிடுகின்றது. 'மலை அழுது செய்த மணிக்கருவாயன்' என்பவன் இச் சிவன் கோயிலினை எடுப்பித்தவன் ஆவான்.

முதலாம் பராந்தகனின் (கி. பி. 987-953) வட்டெழுத்துக் கல்வெட்டு 'திருநாராயண விண்ணகர் பெருமானடிகள் கோயில் திருவழிபாட்டிற்கு நிலம் தானமாக வழங்கியதைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. எனவே இக்கல்வெட்டு இவ்வூரில் உள்ள பெருமாள் கோயிலுக்கு உரியது என அறியலாம். ஆனால் இப்பெருமாள் கோயில் தற்போது இல்லை.

## 59. மானூர்

இவ்வூர் திருநெல்வேலி வட்டத்தில் திருநெல் வேலிக்கு வடமேற்கே 13-ஆவது கி.மீ. தொலைவில் திருநெல்வேலி - சங்கரன்கோயில் சாலையில் அமைந் துள்ளது.

இவ்வூரில் உள்ள அம்பலநாதசுவாமி கோயிலில் மாறஞ்சடையனின் 36 - ஆவது ஆட்சியாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டும் 'கோனேரின்மை கொண்டான்' பாண்டிய மன்னனின் 3-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. முற்காலப்பாண்டியனான மாறஞ்சடையனின் கல் வெட்டு பொறிக்கப்பட்டுள்ளதால், இப்பகுதியின் தொன்மை வரலாற்றுக்கு ஒரு முக்கியமான சான்றாக இக்கோயில் திகழ்கின்றது. கல்வெட்டில் இவ்வூர் ''மன்நிலைநல்லூர்'' என்றும் இறைவன் ''குலசேகர

விண்ணகராழ்வார்'' என்றும், குறிப்பிடப்படுகின்றன. இவ்வூரில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டொன்று நீதி பரிபாலனத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. 'மன்றாடுதல்' என்று வழக்காடுதலைக் குறிப்பிடுகின்றது.

## 60. மேலச்செவல்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் அம்பாசமுத்திரத்திற்குக் கிழக்கே 16 கி.மீ. தொலைவில் அமையப்பெற்றுள்ளது. ஆதித்யேஸ்வரர் எனும் சிவன் கோயில் இங்கு காணப்படுகின்றது. விசயநகர வேந்தர்களான மகாமண்டலேஸ்வரர் ராமராஜவிதவ தேவ மகாராஜ சின்னதிம்மியதேவ மகாராஜா (கி.பி. 1422), வீரபிரதாப சதாசிவ மகாராயர் (கி.பி. 1550) ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் இவ்வூர் ''முள்ளிநாட்டு பிரம்மதேயம் வீரகேரளநல்லூர்'' என்றும் குறிப்பிடப்படுகிறது.

## 61. மேலப்பாட்டம்

இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து 10 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. திரிபுராந்தீஸ்வரர் கோயில், வெங்கடாசலபதி கோயில் ஆகிய இரு பழமையான கோயில்கள் இங்கு உள்ளன. சிவன் கோயிலின் மகாமண்டபத் தென்புறச்சுவரில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு பொறிக்கப் பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூரின் பெயர் மணக்குடி என்றும் இறைவன் பெயர் 'திரிபுராந் தீஸ்வரர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. கிழக்குச் சுவரில் திருவிதாங்கூர் மன்னனுடைய கல்வெட்டும் உள்ளது.

சிவன் கோயிலுக்குத் தெற்கில் பெருமாள் கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் கருவறையின் அதிட்டானப் பகுதியில் கி.பி.13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகள் காணப்படுகின்றன. தென்புற அர்த்த மண்டப அதிட்டானத்தில் சதாசிவதேவ மகாராயரின் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டின் காலம் சகாப்தம் 1480 (கி. பி. 1558) எனக் குறிப்பிடுகின்றது. ஊரின் பெயர் சீவல்லப மங்கலத்து வடகீழ்ப்பிடாகை மணக்குடி மேலப்பாட்டம் திருவேங்கடபுரம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சீவல்லபமங்கலம் என்பது 'சீவலப்பேரி' என்ற ஊரினைக் குறிக்கும். இறைவனின் பெயர் 'திருவேங்கடநாதர்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. கி.பி 13-ஆம் நூற்றாண்டிலேயே இக்கோயில் இருந்திருக்கிறது. பின்பு காலப்போக்கில் பழுதடைந்திருக்க வேண்டும். சதாசிவமகாராயர் காலத்தில் மறுபடியும் எடுத்துக் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

சிவன் கோயிலும், பெருமாள் கோயிலுமே மேலப்பாட்டத்தில் பழமையான வரலாற்றுச் சின்னங்களாக அமைந்துள்ளன.

## 62 மேலப்பாவூர்

இவ்வூர் தென்காசி வட்டத்தில், தென்காசிக்குக் கிழக்கே பாவூர்சத்திரத்திற்கு வடக்கே அமையப் பெற்றுள்ளது. இவ்வூரில் தென்காசிப் பாண்டியர்களால் எடுப்பிக்கப்பட்ட இராசகோபாலசுவாமி கோயில், மீனாட்சி சொக்கநாதசுவாமி கோயில் ஆகிய இரு கோயில்கள் காணப்படுகின்றன. இராசகோபால சுவாமி கோயிலில் ஜடிலவர்மன் குலசேகரன் எனும் பராக்கிரம பாண்டியனின் 2ஆவது ஆட்சியாண்டுக்

கல்வெட்டும் (கி.பி. 1545) பெருமாள் அபிராமபாண்டிய தேவனின் மகனான வீரவெண்பாமாலை எனும் திருநெல்வேலிப் பெருமாள் குலசேகரதேவனின் 4ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் (கி.பி. 1553) பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "குருமறைநாட்டு ராஜகுலராம சதுர்வேதி மங்கலம் பாகூர்" என்றும் இறைவன் "நயினார் அழகிய மன்னனார்" என்றும் குறிப்பிடப்படுகின்றன. மீனாட்சி சொக்கநாதசுவாமி கோயிலிலும் பெருமாள் அபிராம பராக்கிரமபாண்டிய தேவனின் மகனான திருநெல் வேலிப் பெருமாள் குலசேகரன் எனும் பராக்கிரம பாண்டியனின் 3ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இறைவன் "அழகிய சொக்கனார்" எனக் குறிப்பிடப்படுகிறார்.

## 63. மேலப்புளியங்குடி

சிவகிரி வட்டத்தில் புளியங்குடிக்கு மேற்கே 7 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது மேலப்புளியங்குடி. இது கிராமம் அல்ல. ஒரு சில மனிதர்கள் மட்டும் இங்கு வாழ்கிறார்கள். அவர்கள் இரவில் காட்டுப் பன்றி களை விரட்டும் பொருட்டுத் தங்குவதற்காகத் தத்தம் வயல்களின் மூலையில் மிகச் சிறிய குடிசைகளை அமைத்துள்ளார்கள். அதனைக் 'குச்சி வீடு' என்று குறிப்பிடுகிறார்கள். இப்பகுதியில் இரவில் காட்டுப் பன்றிகள் மற்றும் யானைகளின் தொல்லை இருப்ப தாகக் கூறப்படுகிறது.

இப்பகுதியில் மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து 'வாழைமலை ஆறு' என்ற ஓர் ஆறு பாய்கிறது. இவ் வாற்றங்கரையில் பெருங்கற்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள், கருப்பு-சிவப்பு வண்ணப் பானை ஓடுகள் காணக்கிடைக்கின்றன. தாழிகள் புதைக்கப்

பட்டிருக்கும் இடம் மணற்பாங்கான பகுதியாகும். தாழிகள் புதைக்கப்பட்ட இடத்தில் உருண்டையான கற்களைக் குவித்து வைக்கும் 'கற்குவை' (Cairn packing) மரபு இங்கு காணப்படுகின்றது. தாழிகள் குட்டையாகவும், வயிற்றுப்பகுதி பருத்தும், அடிப்பகுதி கூராகவும் (Pyriform) உள்ளது. சாதாரணமாகத் தரையில் இதனை வைக்க முடியாது. தரையில் ஊன்றியே வைக்க வேண்டும். தாழிகளை மூடுவதற்குத் தொட்டி போன்ற அமைப்புடைய மூடிகளைப் பயன்படுத்தியிருப்பதாகவும் தெரிகின்றது. தாழியின் வெளிப்புறம் தாழியினை ஒட்டியே சிறு சிறு கலயங்கள் வைத்துப் புதைக்கும் வழக்கத்தினைக் கொண்டுள்ளனர்.

வாழைமலை ஆற்றங்கரையில் மேடான பகுதியில் அய்யனார் கோயில் ஒன்று அமைந்துள்ளது. கோயிலின் முன் பகுதியில் அய்யனார், பூரணை, புஷ்கலை ஆகிய தெய்வச் சிற்பங்கள் காணப்படுகின்றன. அவை முன்பு இக்கோயிற் கருவறையில் இடம் பெற்றிருக்க வேண்டும். சிற்ப அமைதி கொண்டு பார்க்கும் போது இவை கி.பி. 17-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக இருக்கலாம்.

மேலப்புளியங்குடிக்கு வடக்கே ஒரு சிறு குன்றினைத் தாண்டிச் சென்றால் 'கொங்காணியர்கள்' எனப்படும் பழங்குடி மக்களைச் சந்திக்கலாம்.

## 64. வழுதூர்

இவ்வூர் அம்பாசமுத்திரம் வட்டத்தில் அமையப் பெற்றுள்ளது. இவ்வூரில் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. இவ்வூரின் தொன்மை வரலாறு இக்காலத்திலிருந்து தொடங்குகிறது. இவ்வூரிலுள்ள அக்னீஸ்வரர் சிவன் கோயில்

இவ்வூரின் வரலாற்றிற்குப் பெருமை சேர்ப்பதாக அமைந்துள்ளது. இக்கோயிலில் சடாவர்மன் குலசேகர பாண்டியன், (பூவின் கிழத்தி), முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் மற்றும் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (திருமகள் ஜயமகள்) ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டு களில் இவ்வூர் 'ராஜராஜச் சதுர்வேதி மங்கலம் என்றும், "வழுதூர்" என்றும் "வழுதியூர்" என்றும் குறிப்பிடப்படுகிறது. இறைவன் "திருவன்னீசுர முடையார்" என்றும் "திருவக்னீசுவரமுடையார்" என்றும் "திருவக்னீசுவரமுடைய நாயனார்" என்றும் குறிப்பிடப்படுகிறார். இக்கோயில் பிற்காலப் பாண் டியர் கலைப்பாணிக்குச் சான்றாக விளங்குகின்றது.

## 65. வாசுதேவநல்லூர்

சிவகிரி வட்டத்தில் மேற்கு மலைத்தொடர்ச்சி அடிவாரத்திற்கருகே அமைந்துள்ளது. இவ்வூரில் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற் காலத்தைச் சார்ந்த ஈமத்தாழிகள் கிடைத்துள்ளன. இத்தாழிகள் கழுகுமலையில் கிடைத்த தாழிகளை ஒத்துள்ளது. மேலும் இரும்பிலான உளி ஒன்றும் கிடைத்துள்ளது. இவற்றிலிருந்து இவ்வூரின் தொன்மை வரலாறு பெருங்கற்காலத்திலிருந்தே தொடங்குவதை அறியலாம்.

இவ்வூரிலுள்ள அருள்மிகு சிந்தாமணிநாதசுவாமி கோயிலில் ஏராளமான பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1422-1463), குலசேகரபாண்டியன் (அ) அழகன்பெருமாள் குலசேகரன் (கி.பி. 1429-1473) மற்றும் முதலாம் அதிவீரராம பாண்டியன் (கி.பி. 1564-1606) ஆகியோரின் கல்வெட்டுகள் பொறிக்கப்

பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூரின் பெயர் 'ஆரிநாட்டு வாசுதேவநல்லூர்' என்றும் இறைவனின் பெயர் 'இரவிவன்மீசுவரமுடையார்' என்றும் குறிப்பிடப்படுகின்றது. தென்காசிப் பாண்டியர் காலத்தில் இவ்வூர் மிகவும் சிறப்புற்று விளங்கியிருக்க வேண்டும்.

## 66. வானரமுட்டி

இவ்வூர் சங்கரன்கோவில் வட்டத்தில் கோவில்பட்டி - கழுகுமலைச் சாலையில் அமைந்துள்ளது.

வானரங்கள் இராவணனுடன் போரிட முடியாமல் பின்வாங்கி இவ்வூரில் வந்து முட்டி நின்றதால், 'வானரமுட்டி' எனப் பெயர் பெற்றதாக இவ்வூரின் பெயர்க்காரணம் கூறப்படுகிறது.

இவ்வூரில் வரலாற்றுச் சிறப்பு மிக்க சிவன் கோயில் ஒன்று கோவில்பட்டி-கழுகுமலைச் சாலையின் அருகே அமைந்துள்ளது. இதில் வீற்றிருக்கும் இறைவன் தற்பொழுது 'இராமலிங்கசுவாமி' என்று அழைக்கப்படுகிறார். இக்கோயில் சிறந்த கலை நுட்பத்துடன் வடிக்கப்பட்டுள்ளது.

இக்கோயிலின் உத்திரத்தில் அமைந்துள்ள பூதவரி மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளது. சங்கு ஊதும் பூதம், மத்தளம் கொட்டும் பூதம், பாம்பினைக் கையில் ஏந்தி நிற்கும் பூதம் எனப் பல்வேறு கோணங்களில் பூதங்கள் எழிலாக வடிக்கப்பட்டுள்ளன. பூத கண வரியின் தொடக்கத்தில் பூத கணங்களுக்கெல்லாம் தலைவனாகிய கணபதியின் உருவம் சிறப்புற வடிக்கப்பட்டுள்ளது.

இக்கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், குலசேகர பாண்டியன் ஆகியோரது கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பழமையானது முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216 - 1239) கல்வெட்டாகும். எனவே இம்மன்னன் காலத்திலேயே இக்கோயில் எழுப்பப் பட்டிருக்கிறது எனலாம். கல்வெட்டுகள் இவ்வூரினை 'ஊற்றுத்தூரான சுந்தரபாண்டிய நல்லூர்' என்றும் இறைவனை 'திருவீராமீஸ்வரமுடையார்' என்றும் குறிப்பிடுகின்றன. 'ஊற்றுத்தூரான சுந்தரபாண்டிய நல்லூர்' என்று இவ்வூர்ப் பெயர் குறிப்பிடப்படுவதில், இக்கோயில் எழுப்பப்படுவதற்கு முன்பே இவ்வூர் இருந்து வருகிறது என்பதனை அறியலாம். மேலும் இக்கோயில் எழுப்பப்பட்ட பின்பு 'சுந்தரபாண்டிய நல்லூர்' என்ற புதுப்பெயர் இல்லூருக்கு இடப்பட்டிருப்பதும் தெரியவருகிறது.

## 67. விஜயநாராயணம்

திருநெல்வேலிக்கு வடகிழக்கே சுமார் 60 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

***சிவன் கோயில்***

இவ்வூர்ச் சிவன் கோயிலிலுள்ள (மனோன்மணி ஈசுவரர்) மாறஞ்சடையனின் 2-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவ்வூர் 'விசைய நாராயணச் சருப்பேதி மங்கலம்' என்றும் இறைவன் 'நாட்டாற்றுப்போக்கு பிரம்மதேயம் மனோமயனீச்சுரத்துப் பெருமானடிகள்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. 'சிரிராகவப் பெருமாடிகள்' என்ற பெயரில் பெருமாள் கோயில் இவ்வூரில் இருப்பதையும் தெரியப்படுத்துகின்றது. இவ்வூர் நாட்டாற்றுப்போக்கு பிரம்மதேயமாக இருந்ததை இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

இச்சிவன் கோயிலில் சடையமாறனின் 19-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இறைவனை 'மனோமய ஈய்ச்சரத்துக் கற்றளிப் பெருமானடிகள்' எனக் குறிப்பிடுகின்றது.

இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் 12-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவ்வூர், 'நாட்டாற்றுப் போக்கு சருப்பேதிமங்கலம்' என்றும் இறைவன் 'மனோன்மணீசுவரத்துப் பெருமானடிகள்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

சடாவர்மன் சுந்தரசோழபாண்டியனின் 10-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இவ்வூரினை 'ராஜராஜப் பாண்டி நாட்டு உத்தமசோழ வளநாட்டு நாட்டாற்றுப் போக்கு பிரம்மதேயம் விஜயநாராயணமான ஐயங்கொண்ட சோழச் சதுப்பேதி மங்கலம்' என்று குறிப்பிடுகின்றது.

### இராஜகோபாலநாதசுவாமி கோயில்

ஸ்ரீவல்லபனின் (கி.பி. 1120-1146) 10-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இக்கோயிலில் உள்ள 'ஸ்ரீசடகோபவிண்ணகராழ்வார்', 'ஸ்ரீவரகுண விண்ணகராழ்வார்' மற்றும் ஸ்ரீராகவசக்கரவர்த்திகள் ஆகிய மூவருக்கும் தானம் கொடுத்ததையும், இத்தானம் கொல்லங்கொண்டான் ஸ்ரீகுலோத்துங்க சோழனின் 31-ஆவது ஆட்சியாண்டு முதல் நடைபெறவேண்டுமெனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தானம் துருத்தி மங்கலத்து நம்பி சங்கரன்வாசுதேவன் இவ்வூர்ச் சபையுடன் சேர்ந்து கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது. இக்கல்வெட்டிலிருந்து ஸ்ரீவல்லபன் குலோத்துங்கசோழனின் ஆணைக்குட்பட்ட மன்னனாக இருந்துள்ளான் என்பதனை உணர முடிகின்றது.

**வாணியன் கல்**

இவ்வூர்க் குளத்தருகில் உள்ள கல் ஒன்றில் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக் கல்லினை 'வாணியன்கல்லு' என்று அழைக்கின்றனர். இதில் சடாவர்மன் ஸ்ரீவல்லபனின் (கி.பி. 1120-1146) 40-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வூரிலுள்ள 'மனோமய னேரி' யில் உடைப்பு எடுத்ததை அடைப்பதற்காகத் துருத்தி மங்கலத்து நம்பி சங்கரன் வாசுதேவன் வேநாடு மன்னன் இரவிகோதைவர்மன் காலத்தில் கொடை கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது. இதிலி ருந்து இவ்வேநாட்டு மன்னன் சடாவர்மன் ஸ்ரீவல்லப னின் சமகாலத்தவன் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**ஆதிநாதப்பெருமாள் கோயில்**

ஸ்ரீவல்லபனின் (கி.பி. 1120-46) 17-ஆவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டு இறைவனை வரகுணவிண்ணக ராழ்வார் என்று குறிப்பிடுகின்றது. இக்கோயி லுக்கும், இக்கோயிலிலுள்ள 'ஸ்ரீசடகோபவிண்ணகராழ் வாருக்கும்' கொடை கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது. இக்கொடை ஏற்படுத்தப்பட்ட பொழுது ஸ்ரீவல்லபன் இக்கோயிலிலேயே முகாமிட்டிருந்ததை இக்கல்வெட்டு 'கோயிலின் உள்ளாலைப் பள்ளியறைக்கூடத்துப் [பள்ளி]க் கட்டிலில் எழுந்தருளியிருந்து' என்று குறிப் பிடுகின்றது.

## 68. விந்தனூர்

இவ்வூர் தென்காசி வட்டத்தில் உள்ளது. சாம்பவர் வடகரை என்ற ஊரில் இறங்கி 2 கி.மீ. தொலைவு நடந்தால் இவ்வூரினை அடையலாம். இவ்வூரில்

"ஒட்டன்குளம்" என்று அழைக்கப்படும் குளத்தின் அருகில் ஒரு மேடான பகுதி உள்ளது. இதனை இவ்வூர் மக்கள் "விந்தன் கோட்டை மேடு" எனக் கூறுகின்றனர். இம்மேட்டுப் பகுதியில் பெருங்கற் காலத்தினைச் சேர்ந்த தாழிகளின் சிதைந்த பகுதிகள் ரோமானியரின் ரௌலெட்டட் பானை ஓடுகள், ஆகியவை கிடைத்துள்ளன. இம்மேட்டுப் பகுதிக்கு அருகில் உள்ள பெருமாள் கோயில் கல்வெட்டுகளில் இவ்வூர் "குருமறை நாட்டு விந்தனூர்" எனக் குறிப்பிடப்படுகின்றது. இவ்வூரின் அருகில் உள்ள சாம்பவர்வடகரை என்ற ஊரிலுள்ள சிவன் கோயில் கல்வெட்டுகளில் "விந்தனூர்" என்றும், "பராக்கிரம பாண்டியச் சதுர்வேதி மங்கலம்", என்றும் "பெருமாள் அகரம்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே விந்தனூரும், சாம்பவர்வடகரையும் "விந்தனூர்" என்ற பெயரில் ஒரே ஊராகத் திகழ்ந்திருப்பதை அறிய முடிகிறது. சாம்பவர்வடகரை திருமூலநாதர் கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளில் பழமை யானது பராக்கிரம பாண்டியனின் (கி.பி.1421-1463) 22-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஆகும்.



# நெல்லையப்பர் கோயில் செப்பேடு

ஊர் : திருநெல்வேலி

மன்னன் : அரங்ககிருஷ்ணமுத்து வீரப்பநாயக்கர் (கி.பி. 1682 - 1689)

மொழி : தமிழ்

காலம் : கி.பி. 1682

## முன் பக்கம்

1. சகாத்திதம் சூகூாசக்கு மேல் செல்லாநின்ற கொல்ல அா
2. ருயஅ (ஹூ) துன்முகி ஹூ பங்குனி மீ" ௬ ௨ பூறுவபட்சத்துத் திசமியும்
3. ஆதித்தவாரமும் சுபயோக சுபகரணம் பெற்ற ரேபதி நட்செத்தி
4. ரத்தில் [அரு]ளிச் செய்த உதகதன்மதான விலைப்பிரமாணம் ஆ
5. வது கீள்வேம்புநாடு திருநெல்வேலி உடைய நயினார் நெல்வே
6. லிநாத சுவாமி வடிவம்மன் உச்சந்தி அறம்வளர்த்த கட்டளை

7. க்குக் காரியஞ் செய்யும் சற்க்கரவற்த்தியவர்களுக்கு குட
8. னாடு வள்ளிக்குட்டத்து தலைவமாரோம் தன்மதான விலைப் பிர
9. மானம் ஆவது சவ்வதுரங்க கிட்டிணமுத்து வீரப்பனாயக்க
10. ர்யவர்களுக்குப் புண்ணியமாகவும் திருவேங்கிடநாதர்
11. யவர்களுக்குப் புண்ணியமாகவும் நாங்கள் ஆற்சந்திராற்
12. கம் சந்ததிப் பிரவேசம் ஆண்டனுபவித்து வருகிறயெங்க
13. ள் வகையான காடு தரிசு வள்ளிக்குட்டத் தென்யெல்
14. கைத் தரிசைக்காடு கிரையம் பொன் ரு-ன் இந்தப் பொன் அஞ்
15. சுக்கும் கிரையமாகக் குடுத்த தரிசுக் காட்டுக்கு யெல்
16. கையாவது கீழ் யெல்கை பெரும்படைச் சாத்தாவின் கோ
17. யிலுக்கு மேற்க்கு தென்யெல்கை ஆறுமுகமங்கலதார்
18. யெழுதிக் குடுத்த கட்டளையெல்கைக்கு வடக்கு மேல் யெ
19. ல்கை காட்டாத்தி யெல்கைக்கும் கிழக்கு வடயெல்கை ம
20. றுகாலுக்கு ஓடைக்கும் வெள்ளையன் செல்வல் விளைக்குந்
21. தெற்கே இந்நான்கு யெல்கைக்குள்பட்ட காட்டில் ந
22. ஞ்சை புஞ்சை பயிரிட்டுக்கொண்டு அறம்வளத்து உச்சந்தி
23. கட்டளைக்கு ஆதித்த சந்திரார்க்கம் சந்ததிப்பிரவேசம் ஆ
24. ண்டனுபவித்துக் கொள்வாராகவும் இந்நிலத்திலுள்ள நி

25. தி நிச்சய சேப தரு பாசானம் அட்ட வற்சன்னி யாசாமி யா
26. சித்த சாத்த மென்னப்பட்ட போக தெச்சு உள்ளிய
27. ங்களுக்கும் இவரே யோக்கியர்ராக செம்பிலுஞ் சிலையி
28. லும் வெட்டி ஆற்சந்திராக்கம் அனுபவித்துக் கொள்வரா
29. கவும் இப்படிச் சம்மதித்து இந்த தன்மதானம் விலைப்
30. பிரமாணம் சாதனம் யெழுதிக் குடுத்தோம் வள்ளிக்குட்
31. டத்துத் தலைவமாரோம் திருநெல்வேலி நெல்வேலிநாதசுவாமி வ
32. டிவம்மன் அறம் வளர்த்த கட்டளைக் காரியஞ் செய்யும் ச
33. ற்க்கரவற்த்தியாரவர்களுக்கு இந்த படிக்கு இந்த தன்மத்தை பரிபாலி
34. னம் பண்ணினபேர் கெங்கைக் கரையிலே அநேக
35. கோடி சிவலிங்கப் பிறதிட்சை பண்ணின பலத்தையு

பின் பக்கம்

36. ம் அநேக அசுமேதி யாகம் பண்ணின பலத்தையு பெ
37. றுவாராகவும் இந்த தன்மத்துக்கு யாதாமொருதர் விகா
38. தம் பண்ணினபேர் கங்கைக் கரையிலே காரம்
39. பசுவைக் கொன்ற தோசத்திலே போவாராக இந்தப்படிக்கு இந்த
சாதகம் யெழுதினேன் சிதம்பர
40. நாதன் யெழுத்து

## ஊர்ப்பெயர் மாற்றம்

| தற்போதுள்ள ஊர்ப்பெயர் | கல்வெட்டில் உள்ள ஊர்ப்பெயர் |
|---|---|
| 1 அம்பாசமுத்திரம் | ஸ்ரீராஜராஜசதுப்பேதி மங்கலம், இளங்கோய்க்குடி |
| 2 அரிகேசவநல்லூர் | அரிகேசரிநல்லூர் |
| 3 ஆழ்வார்குறிச்சி | கொல்லம் கொண்ட பாண்டியச் சதுர்வேதி மங்கலம், இராஜராஜ சதுர்வேதி மங்கலத்து வடமேல் பிடாகை காடேறு, முள்ளி நாட்டு வடமேல்பிடாகை ஆழ்வார்குறிச்சி |
| 4 இடைக்கால் | தென் திருவாரூர் ராஜராஜசதுர்வேதி மங்கலம் |
| 5 இலஞ்சி | சுந்தரபாண்டிய நல்லூர் |
| 6 கங்கைகொண்டான் | சீவல்லபச்சதுர்வேதிமங்கலம், கங்கைகொண்டசோழச் சதுர்வேதி மங்கலம் கீழ்க்களக்கூற்றத்து பிரம்மதேயம் சீவல்லபமங்கலம் கீழ்க்களக்கூற்றம் கங்கைகொண்டான் |
| 7 கரிசூழ்ந்த மங்கலம் | கலிசெயமங்கலம் |
| 8 கரிவலம்வந்த நல்லூர் | கரிவர நல்லூர் |

| | | |
|---|---|---|
| 9 | கல்லிடைக்குறிச்சி | மதில்க்குறிச்சி<br>மதிள்க்குறிச்சி<br>ஸ்ரீராஜராஜசதுர்வேதிமங்கலத்துத் தென்பிடாகை கல்லிடைக்குறிச்சி |
| 10 | குற்றாலம் | திருக்குற்றாலச்சதுர்வேதிமங்கலம் |
| 11 | சீவலப்பேரி | தென் திருமாலிருஞ்சோலை |
| 12 | சுத்தமல்லி | வீரவிநோதசதுர்வேதிமங்கலம்<br>உதையமார்த்தாண்ட சதுர்வேதிமங்கலம் |
| 13 | சேரன் மாதேவி | நிகரிலிச்சோழச்சதுர்வேதிமங்கலம்<br>சேரவன் மாதேவிசதுர்வேதிமங்கலம் |
| 14 | தாருகாபுரம் | மலையடிக்குறிச்சி |
| 15 | திருக்குறுங்குடி | வைகுண்டவளநாட்டு நாட்டாற்றுப்போக்கு இராஜராஜசதுர்வேதிமங்கலம் பிரம்மதேயம்<br>வைகுண்டவளநாட்டு நாட்டாற்றுப்போக்கு திருக்குறுங்குடி |
| 16 | திருநெல்வேலி | கீழ்வேம்புநாட்டுத் திருநெல்வேலி |
| 17 | திருவாலீஸ்வரம் | இராஜராஜச்சதுர்வேதிமங்கலம் |
| 18 | தென்காசி | தக்ஷிணகாசி |
| 19 | பன்பொழி | பன்பொழில் |

| | | |
|---|---|---|
| 20 | பாளையங்கோட்டை | ஸ்ரீவல்லபன்மங்கலம் |
| 21 | மணப்படைவீடு | அம்பலத்தாடி நல்லூர்<br>உத்தமசோழச்சதுர்வேதிமங்கலம்<br>சீவல்லபமங்கலத்து மணப்படைவீடு |
| 22 | மன்னார்கோவில் | முடிகொண்டசோழவிண்ணகர்<br>ஸ்ரீஇராஜேந்திரவிண்ணகர்<br>இராஜராஜசதுர்வேதிமங்கலம் |
| 23 | மானூர் | மனநிலைநல்லூர் |
| 24 | மேலச்செவல் | தேசமாணிக்கநல்லூர்<br>செவல் எனும் முள்ளிநாட்டு பிரம்மதேயம்<br>வீரகேரளநல்லூர் |
| 25 | வழுதூர் | இராஜராஜசதுர்வேதிமங்கலம், வழுதியூர் |
| 26 | வாசுதேவநல்லூர் | வாதுதேவநல்லூர் |
| 27 | வானரமுட்டி | ஊற்றுத்தூரான சுந்தரபாண்டியநல்லூர் |
| 28 | விஜயநாராயணம் | விசையநாராயணச்சருப்பேதிமங்கலம்<br>நாட்டாற்றுப்போக்கு சருப்பேதிமங்கலம்<br>நாட்டாற்றுப்போக்கு பிரம்மதேயம் விஜய நாராயணமான ஜயங்கொண்ட சோழ சதுப்பேதி மங்கலம் |



## திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்திலிருந்த பழைய நாட்டுப்பிரிவுகள்

### பெரும் பிரிவுகள்

1. இராஜராஜப் பாண்டிநாடு
2. முடிகொண்டசோழவளநாடு

### சிறு பிரிவுகள்

1. கீழ்வேம்புநாடு
2. மேல்வேம்புநாடு
3. வடஆரிநாடு
4. தென்ஆரிநாடு
5. முள்ளிநாடு
6. குருமறைநாடு
7. களக்குடிநாடு
8. ஆண்மாநாடு
9. தென்வாரநாடு
10. கீழ்க்களக்கூற்றம
11. கோநாடு
12. வைகுண்டவளநாடு

## திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் நுண்கற்காலக்கருவிகள், புதிய கற்காலக் கருவிகள் கிடைக்கும் ஊர்கள்

### நுண்கற்காலம்

1. பழைய குற்றாலம்
2. மாங்குடி
3. தென்மலை
4. செந்தெட்டியாபுரம் விலக்கு

### புதிய கற்காலம்

கீழாம்பூர்

## திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் பெருங்கற்காலச் சின்னங்கள் காணப்படும் ஊர்கள்

1. ஆழ்வார்குறிச்சி
2. இலஞ்சி
3. ஓட்டன்குளம்
4. கரிவலம்வந்தநல்லூர்
5. காரிசாத்தான்
6. கீழநத்தம்
7. குற்றாலம்
8. குன்றத்தூர்
9. கோட்டைக்கருங்குளம்
10. சிங்கிகுளம்
11. பாட்டக்குறிச்சி
12. மருதூர் அணை
13. மாங்குடி
14. மேலப்புளியங்குடி
15. வழுதூர்
16. வாசுதேவநல்லூர்
17. விந்தனூர்

## திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் கல்வெட்டுகள் உள்ள ஊர்கள்

| | ஊர் | வட்டம் |
|---|---|---|
| 1. | அடைச்சாணி | அம்பாசமுத்திரம் |
| 2. | அழகப்பபுரம் | தென்காசி |
| 3. | அம்பாசமுத்திரம் | அம்பாசமுத்திரம் |
| 4. | அத்தாளநல்லூர் | அம்பாசமுத்திரம் |
| 5. | அரிகேசவநல்லூர் | அம்பாசமுத்திரம் |
| 6. | ஆலடியூர் | அம்பாசமுத்திரம் |
| 7. | ஆழ்வார்குறிச்சி | அம்பாசமுத்திரம் |
| 8. | இலஞ்சி | தென்காசி |
| 9. | இடைக்கால் | தென்காசி |
| 10. | இராதாபுரம் | நான்குநேரி |
| 11. | உக்கிரன்கோட்டை | திருநெல்வேலி |
| 12. | ஊர்க்காடு | அம்பாசமுத்திரம் |
| 13. | ஊர்மேலழகியான் | தென்காசி |
| 14. | ஏர்வாடி | நான்குநேரி |
| 15. | ஓமநல்லூர் | அம்பாசமுத்திரம் |
| 16. | கங்கைகொண்டான் | திருநெல்வேலி |
| 17. | கடையம்பெரும்பத்து | அம்பாசமுத்திரம் |
| 18. | கடையநல்லூர் | தென்காசி |
| 19. | களக்காடு | நான்குனேரி |
| 20. | கல்லிடைக்குறிச்சி | அம்பாசமுத்திரம் |
| 21. | கழுநீர்க்குளம் | தென்காசி |
| 22. | கணக்குப்பிள்ளைவலசை | தென்காசி |



| | | |
|---|---|---|
| 23. | கரிசூழ்ந்தமங்கலம் | அம்பாசமுத்திரம் |
| 24. | கரிவலம்வந்த நல்லூர் | சங்கரன்கோவில் |
| 25. | காடுவெட்டி | தென்காசி |
| 26. | காரிசாத்தம் | சங்கரன்கோவில் |
| 27. | கிரியம்மாள்புரம் | அம்பாசமுத்திரம் |
| 28. | கீழாம்பூர் | அம்பாசமுத்திரம் |
| 29. | கீழக்கடையம் | அம்பாசமுத்திரம் |
| 30. | கீழக்கலிங்கல் | தென்காசி |
| 31. | கீழ்ப்பாவூர் | தென்காசி |
| 32. | கீழச்செவல் | தென்காசி |
| 33. | கீழப்பாட்டம் | திருநெல்வேலி |
| 34. | குற்றாலம் | தென்காசி |
| 35. | கொந்தநல்லூர் | திருநெல்வேலி |
| 36. | கோட்டைச்சேரி | நான்குநேரி |
| 37. | கோட்டைக்கருங்குளம் | நான்குநேரி |
| 38. | கோவில்குளம் | அம்பாசமுத்திரம் |
| 39. | சங்கர நயினார் கோயில் | சங்கரன்கோவில் |
| 40. | சங்கம் | நான்குநேரி |
| 41. | சாயாமலை | சங்கரன்கோவில் |
| 42. | சித்தூர் | நான்குநேரி |
| 43. | சிங்கம்பட்டி | அம்பாசமுத்திரம் |
| 44. | சிங்கிகுளம் | நான்குநேரி |
| 45. | சிவராமன்பேட்டை | தென்காசி |
| 46. | சிவசைலம் | அம்பாசமுத்திரம் |
| 47. | சீவலப்பேரி | திருநெல்வேலி |
| 48. | சுத்தமல்லி | திருநெல்வேலி |
| 49. | செண்பகராமன் நல்லூர் | நான்குநேரி |

| | | |
|---|---|---|
| 50. | தச்சன்குடியிருப்பு | தென்காசி |
| 51. | சேந்தமங்கலம் | சங்கரன்கோவில் |
| 52. | தளபதிசமுத்திரம் | நான்குநேரி |
| 53 | தாருகாபுரம் | சங்கரன்கோவில் |
| 54. | திருக்குறுங்குடி | நான்குநேரி |
| 55. | திருநெல்வேலி | திருநெல்வேலி |
| 56. | திசையன்விளை | நான்குநேரி |
| 57. | திருச்சிற்றம்பலம் | தென்காசி |
| 58. | திருக்கரூர் | தென்காசி |
| 59. | திருமலைபுரம் | சங்கரன்கோவில் |
| 60. | திருப்புடைமருதூர் | அம்பாசமுத்திரம் |
| 61. | திருவாலீஸ்வரம் | அம்பாசமுத்திரம் |
| 62. | தென்காசி | தென்காசி |
| 63. | தென்மலை | சங்கரன்கோவில் |
| 64. | தென்திருப்புவனம் | அம்பாசமுத்திரம் |
| 65. | தெற்கு அரியநாயகிபுரம் | அம்பாசமுத்திரம் |
| 66. | தேசமாணிக்கம் | அம்பாசமுத்திரம் |
| 67. | நான்குநேரி | நான்குநேரி |
| 68. | நந்நகரம் | தென்காசி |
| 69. | நாயினார்அகரம் | தென்காசி |
| 70. | நெட்டூர் | தென்காசி |
| 71: | பள்ளக்கால் | அம்பாசமுத்திரம் |
| 72. | பன்பொழி | தென்காசி |
| 73. | பத்மனேரி | நான்குநேரி |
| 74. | பரதேசிப்புடை | தென்காசி |
| 75. | பத்தமடை | அம்பாசமுத்திரம் |
| 76. | பாப்பாக்குடி | அம்பாசமுத்திரம் |

| | | |
|---|---|---|
| 77. | பாபநாசம் | அம்பாசமுத்திரம் |
| 78. | பாப்பான்குளம் | தென்காசி |
| 79. | பிரம்மதேசம் | அம்பாசமுத்திரம் |
| 80. | புலியூர் | தென்காசி |
| 81 | பூங்குறிச்சி | அம்பாசமுத்திரம் |
| 82. | பேட்டை | திருநெல்வேலி |
| 83. | மலையடிக்குறிச்சி | சங்கரன்கோவில் |
| 84. | மணப்படைவீடு | திருநெல்வேலி |
| 85. | மன்னார்கோயில் | அம்பாசமுத்திரம் |
| 86. | மறுகால்தலை | பாளையங்கோட்டை |
| 87. | மானமங்கலம் | அம்பாசமுத்திரம் |
| 88. | மானூர் | திருநெல்வேலி |
| 89. | மாறாந்தை | தென்காசி |
| 90 | முனைஞ்சிபட்டி | நான்குநேரி |
| 91. | மேலகரம் | தென்காசி |
| 92. | மேலப்புலியூர் | தென்காசி |
| 93. | மேலக்கடையம் | அம்பாசமுத்திரம் |
| 94. | மேலப்பாவூர் | தென்காசி |
| 95. | மேலச்செவல் | அம்பாசமுத்திரம் |
| 96. | வடக்குஅரியநாயகிபுரம் | அம்பாசமுத்திரம் |
| 97. | வடக்குக்காருக்குறிச்சி | அம்பாசமுத்திரம் |
| 98. | வள்ளியூர் | நான்குநேரி |
| 99. | வழுதூர் | அம்பாசமுத்திரம் |
| 100. | வாசுதேவநல்லூர் | சங்கரன்கோவில் |
| 101. | விக்கிரமசிங்கபுரம் | அம்பாசமுத்திரம் |
| 102. | விஜயநாராயணம் | நான்குநேரி |
| 103. | வீரசிகாமணி | அம்பாசமுத்திரம் |
| 104. | வீரவநல்லூர் | திருநெல்வேலி |
| 105. | வைராவிகுளம் | அம்பாசமுத்திரம் |

## துணை நூற்பட்டியல்


1. திருநெல்வேலிச்சீமை சரிதம் - திரு. குருகுஹதாசப் பிள்ளை
2. Madras District Gazetteers-Tirunelveli H. R, Pate I.C.S.
3. A History of Tirunelveli - Bishop R. Caldwell
4. A bibliography on Indian Megaliths - K. S. Ramachandran
5. Middle Chola Temples - S. R. Balasubramaniam
6. Neolithic and Megalithic cultures in Tamilnadu - B. Narasimhaiah
7. பாண்டியர் வரலாறு - டாக்டர் கே. வி. ராமன்
8. மதுரைநாயக்கர் வரலாறு - அ. கி. பரந்தாமனார்
9. மெய்க்கீர்த்திகள் - பூ. சுப்பிரமணியம்
10. சிதம்பரனார் மாவட்டம் - மா. செந்தில் செல்வக்குமரன் சொ. சந்திரவாணன்
11. South Indian Inscriptions Vol. XIV
12. South Indian Inscriptions Vol. XXII
13. A Topographical list of Inscriptions of the Madras Presidency - V. Rangacharya
14. Epigraphia Indica Vol. IX
15. Indian Antiquarian Vol. II
16. Epigraphia Indica Vol. IV
17. Travancore Manual Vol. I
18. Sewells list of copper plates 1 to 5


